# கனகாபிஷேக மாலை
## (திறனாய்வு)

முனைவர் பீ. டாக்டர் நசீம்தீன்
விரிவுரையாளர், தமிழ்த்துறை
கேரளப் பல்கலைக்கழகம், காரியாவட்டம்




உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம்
International Institute of Tamil Studies
சி.ஐ.டி. வளாகம், தரமணி, சென்னை-600 113.

ஏவிஎம். ஜபாருதீன் நூர்ஜகான்
அறக்கட்டளைச் சொற்பொழிவு—3
(16, 17-12-92)

*Av. M. Jaffardeen Noorjehan Endowment Lecture*-3
*Endowment Lectures Publication No*-46

---

## BIBLIOGRAPHICAL DATA


| | | |
|---|---|---|
| Title | : | Kaṉakāpiṣēka Mālai (Tiṟaṉāyvu) |
| Author | : | **Dr. P. Doctor Nazeemdeen**<br>**Lecturer in Tamil, University of Kerala, Kariyavattom, TVM-695581** |
| Publisher & © | : | **International Institute of Tamil Studies, CIT Campus, Taramani, Madras-600 113.** |
| Publication No. | : | **183** |
| Language | : | **Tamil** |
| Date of Publication | : | **April 1994** |
| Edition | : | **First** |
| Paper Used | : | **Tamilnadu Creamove (m) 16 Kg** |
| Size | : | **21 × 14 Cms** |
| Printing types | : | **10 Point** |
| No. of Copies | : | **1200** |
| No. of Pages | : | **VI + 96** |
| Price | : | **Rs. 16/-** |
| Printers | : | **Pavai Printers Pvt. Ltd., Madras-14, Phone-832441** |
| Artist | ; | **Sathya** |
| Subject | : | **Criticism on the Epic Kanagabishega malai.** |


---

# பதிப்புரை

இசுலாமிய இலக்கியச் செல்வங்களைத் தமிழுலகு முழுமையும் நன்குணரும் பொருட்டு நிறுவனத்தில் நிறுவப்பட்டுள்ள, 'ஏவி. எம். ஜபாருதீன் நூர்ஜகான் அறக்கட்டளை'யின் மூன்றாவது சொற்பொழிவு இந்நூல்.

கி. பி. 1648இல் எழுந்த முதல் இசுலாமியத் தமிழ்க் காப்பியமான, இராமநாதபுர மாவட்டத்தைச் சார்ந்த **சேக் நயினார் கான்** எனும் கனகவிராயரின் 'கனகாபிஷேக மாலை'யை இச்சொற்பொழிவின் வழித் தமிழகத்திற்கு முழுமையாக, சிறப்புற அறிமுகப்படுத்தியுள்ள நூலாசிரியர் முனைவர் **பீ. டாக்டர் நசீம்தீன்** அவர்களை நிறுவனம் நன்றியுடன் பாராட்டுகின்றது.

இசுலாமிய இலக்கியப் பணியில் தம்மை நிலைப்படுத்தி நிறுவனத்தில் இவ்வறக்கட்டளை நிறுவி உதவிய சான்றோர் ஹாஜி ஏவி. எம். ஜபாருதீன் அவர்கள்; அறக்கட்டளைச் சொற்பொழிவிற்கும் நூலாக்கத்திற்கும் துணைநின்ற நிறுவன இயக்குநர் (பொறுப்பு) முனைவர் **அன்னிதாமசு** அவர்கள்; மெய்ப்புத் திருத்தியும் சொல்லகராதி தயாரித்தும் உதவிய ஆய்வாளர் **பு. பாலாஜி**; சிறப்பாக அச்சிட்டுத் தந்துள்ள **பாவை பிரிண்டர்ஸ் (பி) லிமிடெட்**, இவர்கள் அனைவருக்கும் நன்றி.

**ச. சிவகாமி**

சென்னை-113 — அறக்கட்டளைப் பொறுப்பாளர்

7-4-'94 — உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம்



# ஆசிரியர் அறிமுகம்

## *முனைவர் பீ. டாக்டர் நசீம்தீன் (15-2-48)*

நாட்டுப் புறவியல்—பழங்குடி மக்கள் வாழ்வியல் ஆய்வில் தொடர்ந்து ஈடுபாடு காட்டி வரும் இவர், முப்பதிற்கு மேற்பட்ட ஆய்வுக் கட்டுரைகளையும் 3 நூல்களையும் படைத்துள்ளார். கேரளப் பல்கலைக்கழக மாணாக்கரான இவர் அப்பல்கலைக்கழக வழக்கப்படித் தம் முதுகலைப் பட்டத்திற்கான 'பாரதிதாசன் பாடல்களில் இயற்கை' எனும் ஆய்வேட்டை நூலாகச் சமர்ப்பித்தவர் (1973). 'இடுக்கி மாவட்டப் பழங்குடி மக்களின் வழக்காற்றியல்' எனும் முனைவர் பட்ட ஆய்வேடும் (1989) நூலாக வெளிவந்துள்ளது. 'கோவிலன் சரித்திரம்' எனும் நாட்டுப்புறக் கதைப்பாடலை ஆய்வுடன் பதிப்பித்துள்ளார் (1992).

'தென்னிந்திய மொழி நாட்டுப்புறவியல் கழகத்'(FOSSILS) தொடர்புச் செயலாளராகவும், கேரளப் பல்கலைக்கழகத் தமிழ்த் துறையின் பழைய மாணவர் சங்கமான 'இளங்கோ மன்றச் செயலாளராகவும் உள்ளார். அத்துறை வெளியிடும் ஆய்வுக் கட்டுரைகள், ஆய்வு இதழ் போன்றவற்றிற்கு இணைப் பதிப்பாசிரியருமாவார்.

பல்கலைக்கழக மான்யக் குழுவின் உதவித் திட்டத்தினால் 'நெல்லியம்பதிமலைப் பழங்குடிகளின் வாழ்வியல்' ஆய்வை நிறைவு செய்து (1986) தற்பொழுது, 'தென்னிந்தியக் கண்ணகி பழங்கதைகள்' குறித்து ஆய்வு செய்து வருகிறார்.

# நன்றியுரை

கனகவிராயரின் கனகாபிஷேக மாலை பற்றிய திறனாய்வை அறக்கட்டளைச் சொற்பொழிவுக்கு எடுத்துக் கொள்ளுமாறு பணித்து, இப்பணியைச் செவ்வனே முடியத் தூண்டுகோலாக இருந்த உலகத் தமிழாராய்ச்சி நிறுவன இயக்குநர் (பொறுப்பு) முனைவர் **அன்னி தாமசு** அவர்களுக்கும், அறக்கட்டளைச் சொற்பொழிவுப் பொறுப்பாளர் முனைவர் **ச. சிவகாமி** அவர்களுக்கும் என் நன்றி உரித்தாகும்.

இவ்வாய்வுக் கட்டுரை தட்டச்சு செய்யுங் காலத்து உடனிருந்து உதவிய எனது மாணவர் **ஐசக் அருள்தாஸு**க்கும் நன்றி.

**நசீம்**

# உள்ளே

# அறிமுகம்

தமிழிலக்கிய வரலாற்றில், சமய இலக்கியங்களின் தோற்றத்திற்குப் பலவிதமான காரணங்கள் காணப்படுகின்றன. ஒரு சமயத்தின் வளர்ச்சித் தாக்கத்திலிருந்து தங்களது சமய நசிவை நீக்கிப் பாதுகாக்கும் முகமாகப் பல இலக்கிய முயற்சிகள் நிகழ்ந்து வந்துள்ளன. சமுதாய, அரசியல், பொருளாதாரக் காரணிகள் இம் முயற்சிகளின் பின்னணியிலிருந்திருக்கின்றன. இந் நிலை, இடைக்கால இலக்கிய முயற்சிகள் வரை முழு வேகத்தில் செயல்பட்டிருக்கிறது. இதற்கடுத்த காலக் கட்டத்தில் தான் கிறித்தவ, இசுலாமிய இலக்கிய முயற்சிகள் முனைப்புப் பெற்றிருக்கின்றன. அதுவரை தமிழில் தோன்றிய முன்னணி இலக்கியங்களின் தாக்கம் அம் முயற்சிகளில் பிரதிபலித்தன. இது மொழியென்ற கட்டுக் கோப்பான கருத்துப் பரிமாற்ற ஊடகத்தின் நிலைபேற்றால் நிகழ்ந்த செயல்பாடு எனலாம். அக் காலக் கட்டப் புலமை மிக்கார் சமயக் காழ்ப்பில்லா இலக்கியத்திறனாய்வை மனதில் கொண்டிருந்தமைக்கு இது ஓர் எடுத்துக்காட்டாகும். கம்பராமாயணம் முதலான காவியங்களின் இலக்கியத் தாக்கங்கள் பிற்கால இலக்கியங்களில் சில இலக்கிய மரபுகளை உருவாக்கின.

இந்நிலையில்தான் சைவ, வைணவ, சமய இலக்கியங்கள் போன்றவை, தமது சமய வளர்ச்சிக்கு உதவும் என்ற நோக்கில் சமயக் குரவர்கள் பல புதிய வடிவங்களை அறிமுகப்படுத்த முனைந்தனர். நாமா, படைப்போர், மாலை முதலான புதிய வடிவங்கள் தமிழுக்கு அறிமுகப்படுத்தப்பட்டன. சைவக் குரவர்களின் வரலாறு கூறும் 'பெரிய புராணம்'' கனகாபிஷேக மாலை' முதலான வரலாறு தழுவிய காப்பிய முயற்சிகளுக்குத் தூண்டுகோலாயிருந்தது என்பர்.

கனகவிராயரது 'கனகாபிஷேக மாலை'யின் காப்பியக் கட்டுக் கோப்பு, பெரியபுராணக் கட்டமைப்பை நினைவூட்ட

லாம். பெரிய புராணத்தில் சுந்தரரின் வாழ்க்கை வரலாறு இணைச்சரடாக இருப்பது போல. கனகாபிஷேக மாலையில் அலி (ரலி), இமாம் ஹுசைன் ஆகியோரின் வரலாறு இணைச் சங்கிலியாக அமைவதைக் காணுகிறோம். நபி பெருமானின் இறுதிக் காலத்திலிருந்து தொடங்கும் இக் காப்பியம் ரசூலின் பின்னர் வந்த கலிபாக்களின் வரலாறுகளை வகைப்படுத்திச் செல்கிறது. அசன், உசைனாரது சரித்திரமானது இக் காப்பியத்தில், தியர்கச் சிறப்பை எடுத்தியம்பும் 'துன்பியல்' சித்திரமாக நிலை கொள்கிறது.

## காப்பியம்

தொல்காப்பியம் தொன்மை, தோல், இயைபு, விருந்து எனும் வனப்புகளிலும் யாப்பு வகையான உரையிலும் காப்பியத்தை உணர்த்துவதாக இளம்பூரணர் கருதுகிறார் என்பர்.[1]

காப்பியத்தைக் குறிப்பிட வேறு பல சொற்களே முற்கால இடைக்காலக் காப்பிய ஆசிரியரால் கையாளப்பட்டுள்ளன. காப்பியம் என்ற சொல் இன்றியும் அப் பொருண்மையும் பொருளும் வழங்கப்பட்டிருந்த நிலை இது.[2] இம் மரபைப் பின்பற்றியே கனகவிராயர் தனது இன்றமிழ்க் காப்பியத்திற்குக் ''கனகாபிஷேக மாலை'' எனப் பெயரிட்டார் போலும்.

**இக் காப்பியத்தின் காலம் கி.பி. 1648 (ஹிஜ்ரி 1058).** இக் காலக் கட்டத்தில் இசுலாமியக் காப்பியங்கள் பல தோன்றியிருப்பது குறிப்பிடத் தக்கதாகும். தமிழில் சிற்றிலக்கியங்கள் வளர்ந்து வந்த இக் காலக் கட்டத்தில் இசுலாமியப் புலவர்கள் காப்பிய வடிவைத் தேர்ந்து கொண்டது வியப்பாக இருக்கிறது.

கனகாபிஷேக மாலையைத் தொல்காப்பியர் கூறும் 'வனப்பு' வகையில் சேர்க்க இயலாது. ஏனெனில், வனப்பு என்பது 'காப்பியக் கதையைப் பழைய இலக்கியங்களிலிருந்தோ அல்லது இதிகாசங்களிலிருந்தோ தேர்ந்து கொள்ளாமல் தாமே கதையைப் புனைந்து கொள்வது' ஆகும்.[3]

---

1. காப்பியப்புனைதிறன், ச.வே.சு., ப. 3. 1979.
2. மேற்படி
3. மேற்படி ப. 15.

ஆனால் கனகவிராயர் இக் காப்பியத்திற்கான மூலக் கதையை **முக்கத்தலு ஹுஸைன்** எனும் **பார்சி நூலிலிருந்து** எடுத்துக் கொண்டிருக்கிறார். அவ்வரபு நூல் **'முக்கத்திலூசன்'** எனத் தமிழில் குறிப்பிடப்படுகிறது. எனினும் பல நிலைகளில் தமிழ் மரபுக்கு உட்பட்டுக் கனகாபிஷேக மாலை படைக்கப்பட்டுள்ளதைக் காண்கிறோம்.

இந் நூல் பதிப்பு அணிந்துரையில் சிலம்பொலி செல்லப்பன் குறிப்பிட்டிருப்பதுபோல, கவிராயர், எட்டுக் கலீபாக்களைப் போற்றிப் பாடியுள்ள தொகுப்பு ஆதலால் கனகாபிஷேக மாலை எனும் பெயர் வந்திருக்கலாம். அல்லது இக் காப்பியத்தைப் பாடியதாலேயே புலவருக்கு இப் பெயர் அமைந்திருக்கலாம்.

நபிகள் நாயகத்தின் பின் அபூபக்கர், உமறு, உதுமான், அலி, ஹஸன், ஹுஸைன், செய்னுலாபிதீன் ஆகிய எட்டு மன்னர்கள் ஆட்சிக்கு வந்தது மாலை போன்று தொடுக்கப்பட்டிருப்பதால் கனகாபிஷேக மாலை எனப் பெயர் பெற்றிருக்கலாம் என்பது உவைஸ் கருத்தாகும்.[1]

இஸ்லாத்தின் இணையிலாக் கோட்பாடுகளை விவரிக்கும் நூலாயினும் நபி பெருமானது இறுதிக்காலம், உதுமான் ஹுஸைன் ஆகியோர் வஞ்சனையால் கொல்லப்பட்ட சரித்திரம் என அவலச்சுவை நிரம்பப் பாடப்பட்ட நூலாகையால் **கண்களினால் அபிஷேகம் செய்தலைக் குறிப்பதாகவும் எடுத்துக் கொள்ளலாம்.**

பொதுவாகக் காப்பியக் கூறுகள் பலவாயினும் சிறப்புக் கூறுகளாகச் சிலவற்றைக் கொள்கிறோம். அவற்றுள் இன்றியமையாதன நூன்முகம், நுவல் பொருள், தலைவன், இயற்கை முதலியவற்றின் வருணனை, அக வாழ்வு, புறவாழ்வு, அக வடிவம், புறவடிவம், சுவையும் பாவமும், யாப்பும் நடையும் ஆகியனவாகும். 'அபிஷேக மாலை' இவ்வனைத்துக் கூறுகளையும் பெற்றுத் திகழும் அரிய காப்பியமாகும்.

இக் காப்பியத்தை எழுதிய கனகவிராயரின் இயற்பெயர் **சேக் நயினார் கான்** என்பதாகும். இவர் **இராமநாதபுரம்** மாவட்டத்திலுள்ள **'ராஜ கம்பீரம்'** என்ற ஊரைச் சார்ந்தவர். இதனை,

---

1. 'Muslim Contribution to Tamil Literature', M. M. Uvaise, 1990, P. 46.

**''மாதரு வரசர் மணிமுடி புனைந்த**
**வாறெலாம் வகைவகை யாக**
**வேதிய ரிருவர் விரித்துரை செய்யும்**
**விழுப்பொருள் உளத்தினில் தரித்து**
**ஏதிலார்க் குதவு பாண்டிமா தேசத்**
**திராஜகெம் பீரநன் நாடன்**
**பூதலம் புகழும் கனகவிராயன்**
**புகன்றனன் புதுமொழி தமிழால்**

(கடவுள் வாழ்த்துப் படலம் 22)

என்ற பாடலால் அறியலாம்.

கனகவிராயரின் கனகாபிகாபிஷேக மாலையே முதல், இஸ்லாமியத் தமிழ்க் காப்பியமாகக் குறிப்பிடப்படுகிறது. இக் காப்பியப் புலவரின் புரவலராயிருந்தவர் மதுரையைச் சார்ந்த **செய்துகானின் மகனான 'கொந்தால கான்'** என்பவ ராவார். முக்கத்தலு ஹுசைன் என்ற மூல நூலிலிருந்து காப்பியப் பொருளை இவருக்கு எடுத்து நுதலியவர்கள் இருவர். ஒருவர் மகாராஷ்டிரத்தைச் சார்ந்த அப்துல் காதிரின் மகன் சேக் முகமது மஹ்தூம் என்பவர். மற்றொருவர் அத்தாபாய் மஹ்தூம் என்பவரின் மகனான கானுமிய்யா லெப்பை என்பவர் ஆகும்.

இந்நூல் எழுதப்பட்ட ஆண்டு ஹிஜ்ரி 1058 (கி.பி. 1648); அதாவது நரபதி சகாப்தத்தில் விரோதி கிருதி 1564 இல் எழுதப்பட்டது. (சீறா எழுதிய உமறுப்புலவர் பிறந்தது கி.பி. 1642)

நபி பெருமானின் இரண்டாவது பேரனான (மகள் வயிற்றுப் பிள்ளை) இமாம் ஹுசைனின் வரலாற்றை விதந்தோதும் இந்நூல் 35 படலங்களாகப் பகுக்கப்பட்டுள்ளது. இரண்டா யிரத்து எழுநூற்றித் தொண்ணூற்றிரண்டு பாடல்களால் இயன்றது இக் காப்பியம்.

இசுலாமியத் தமிழ்க் காப்பியங்கள் பதினாறினுள் **முதன்மையுடையதாகக்** கருதப்படும் 'கனகாபிஷேக மாலை' **7–3–1862 இல் முதன் முதலில் அச்சிடப்பட்டது.**

**கண்ணகுமது மகுதூ முகம்மது புலவர்** இந்நூலைப் பரிசோதித்துப் பதிப்பித்து வெளியிட்டுள்ளார். இதன் இரண்டாம் பதிப்பு 11-12-1891-இல் இப் புலவராலேயே பதிப் பிக்கப்பட்டுள்ளது. இவ்விரண்டு பதிப்புக்களுக்கும் இடைப்

பட்ட காலத்தில் வேறொரு புலவரால் ஒரு பதிப்பு வெளி வந்திருக்கலாம் என டிசம்பர் 1990-இல் இந்நூலைப் பதிப் பித்துள்ள செய்யிது முஹம்மது ஹசன் பதிப்புரையில் குறிப்பிடு கின்றார். கீழக்கரையில் நடந்த ஐந்தாம் உலக இசுலாமியத் தமிழ் இலக்கிய மாநாட்டில் வெளியிடப்பட்ட 'ஹசன்' பதிப்பே இவ்வாராய்ச்சிக்கு எடுத்துக் கொள்ளப்பட்டுள்ளது.

கனகாபிஷேக மாலை மக்களிடையே பெரும் வரவேற்பைப் பெற்றிருந்தமையால், பல வழி நூல்கள் தோன்றின. இவற்றில், சோதரகுடி பக்கீர் மதாறுப் புலவரின் 'இராஜமணி மாலை', 'காசீம் படைவெட்டு' ஆகிய நூல்கள் குறிப்பிடத்தக்கவை களாகும்.

## நூலும் நுவல் பொருளும்

கனகாபிஷேக மாலையில் நுவலப்படும் வரலாறு, காப்பியக் கதைக்கேற்பப் பல புனைவுகளும் கொண்டதாகும். இது பற்றி 'ஹசன்', 'இஸ்லாமியத் தமிழ் இலக்கிய நூல்கள் பலவற்றிலும், பொதுவாக எல்லோராலும் ஒப்புக் கொள்ளப் படும் 'ஆதாரப் பூர்வமான' செய்திகளைத் தவிர்த்து மிகையான கற்பனைகளும் காணப்படுகின்றன. ஆயினும் அவை பெரும்பாலும் நம் முஸ்லீம் தமிழ்ப் புலவர்களின் கற்பனையில் பிறந்தவை அன்று. அவற்றிற்கு உரைதேடிக் கொடுத்த அறிஞர்கள் மூல நூல்களில் கண்டு எடுத்துக் கொடுத்தவையே.' எனக் குறிப்பிடுகின்றார்.[1]

இந்நூலுள் கூறப்படும் வரலாறு அத்தனையும் முழு உண்மை என்று ஏற்றுக் கொள்வதைவிட இதன் இலக்கியச் சிறப்புக்கு ஏற்றம் கொடுப்பது சிறப்பு ஆகும்.

இக்காப்பியத்தின் நோக்கம், நபி பெருமானாரின் மகள் வயிற்றுப் பேரரான இமாம் ஹுசைன் வரலாறு கூறுவது ஆகும். இதனை,

**''தேமலர் மரப மாலைத் தீனுளோர் பெரிது வாழ**
**மாமலர் வாவி சூழும் வயலகம் பேட்டை மன்றிற்**
**கோமக னுசைனார் காதை குலத்தமிழரங்கஞ் செய்தான்**
**காமரு காளை யன்ன கனகவி ராயன் மாதோ''**

(26)

---

1. கனகாபிஷேக மாலை—பதிப்புரை, 1990, பக். xviii.

எனக் கவிராயர் குறிப்பிடுகிறார். ஆனால் இக் காப்பியத்தின் பெரும் பகுதியும் நபி பெருமானின் இறுதிக் கால வரலாறு முதல், பிற கலீபாக்களின் வரலாறு, அசன், உசைனார் வரலாறு, அசனாரின் மகன் சைனுலாபுதீன் அரசேற்ற வரலாறு வரையான செய்திகளைக் கூறுவதாக அமைந்துள்ளது. திமிஷ்கில் போட்டி அரசோச்சிய ஹலரத் மாவியா மற்றும் அவரது மகன் எசீது ஆகியோரின் வரலாறுகளும் கனகாபிஷேக மாலையில் பாடப்பட்டுள்ளன. சறாயீலின் அரசு, இசுக்கிலானீல் அரசேற்ற அலியார் மகன் முகம்மது ஹனீபாவின் அரசாட்சி ஆகியனவும் பாடு பொருளாகியுள்ளன. கர்பலாவில் இமாம் ஹுசைன் படுகொலை செய்யப்பட்ட காட்சியை மிக விரிவாகப் பாடியுள்ளார் கனகவிராயர். அக் காட்சிகள் ஒரு துன்பியல் காப்பியத்தின் அனைத்துக் கூறுகளையும் கனகாபிஷேக மாலைக்கு நல்கிவிடுகின்றன. இசுலாமியர்களிடையே அலி (ரலி) அவர்களையும், அவர் தம் புதல்வர்களையும் முதன்மைப் படுத்தும் (ஷீயா) பிரிவினரின் நூல்களில் காணப்படும் வரலாறு கனகாபிஷேக மாலையில் பிரதிபலிப்பதாகக் கருதுகின்றனர்.

நபிகள் நாயகம் (சல்) அவர்களுக்குப் பின்னர் தலைமைப் பதவி (ஹிலாபத்) அவர்களது மகள் பாத்திமா (ரலி) அவர்களின் கணவரான ஹலரத் அலி (ரலி) அவர்களுக்குக் கிடைத்திருக்க வேண்டுமென்றும் (அப்பதவியானது பரம்பரையாகத் தொடர்ந் திருக்க வேண்டுமென்றும்) ஷீயா பிரிவினர் கருதுகின்றனர் அவ்வாறல்லாமல் அப்பதவி ஜனநாயக முறைப்படி அமைய வேண்டுமெனப் பெரும்பான்மையினர் கருதினர். இப்பிரிவினர். ''அஹ்லுஸ் ஸுன்னத் வல் ஜமாஅத்'', அல்லது ஸுன்னி பிரிவினர் எனப்படுகின்றனர். இதுபோன்ற ஜனநாயக முறைப்படியே முதல் நான்கு கலீபாக்கள் (ஆட்சியாளர்கள்) தேர்வு செய்யப் பட்டனர். நான்காமவரே ஹலரத் அலி (ரலி) அவர்கள். முதல் மூன்று கலீபாக்களும் ஆட்சியை அலி (ரலி) அவர்களுக்கு முதலிலேயே கிட்டாமல் கவர்ந்து கொண்டவர்கள் என்பது 'ஷீயா' பிரிவினரின் கொள்கையாயிற்று. இதனால் அபூபக்கர் (ரலி), உமர் (ரலி), உதுமான் (ரலி) ஆகிய மூன்று **கலீபாக் களையும் நிந்திப்பது** அவர் தம் கொள்கையாகி இது அவர் தம் நூல்களில் பிரதிபலிக்கவும் செய்கிறது. இசுலாமியர் படையெடுப்பின் போது ஷீயா பிரிவினர் சிலர் தமிழகத்தில் குடியேறினர். இவர்களது கொள்கையும் இங்குப் பரவியது. இமாம் ஹுசைன் அவர்கள் கர்பலாவில் படுகொலை செய்யப் பட்ட கொடுஞ்செயல் மக்கள் மனதில் நீங்கா இடம் பெற்றது. இதனால், ஹலரத் அலி (ரலி) அவர்கள் கிலாபத் பதவி

ஏற்பதற்கு எதிராக இருந்த மாவியா (ரலி), அசன், ஹுசைன் ஆகியோருக்கு எதிரியாயிருந்த 'எசீது' ஆகியோர் ஷீயா பிரிவினரால் கடுஞ்சொற்களால் விமரிசிக்கப்படுகின்றனர்.

மாவியா (ரலி) நபிகள் நாயகத்தின் தோழர். இதனால் அவரை விமரிசிப்பது கூடாதென்பது நடுநிலை நோக்குடைய ஸுன்னி முஸ்லீம் தலைவர்களின் கருத்தாகும். எசீதையும் விமரிசிக்கலாகாது என்பது இமாம் கஸ்ஸாலி (ரஹ்) அவர்களின் முடிவாகும். ஆயினும் எசீதைக் குறை கூறுவோர்க்குக் கர்பலாவில் நிகழ்ந்த இமாம் உசைனின் படுகொலையே அடிப்படையாக அமைந்து விடுகிறது.

கனகவிராயர் இதில் எக் கொள்கை உடையவர் என்பதை ஆராயும்போது 'அவர் முழுக்க முழுக்க ஷீயாக்' கொள்கையில் ஊறியவர் என்று நினைப்பது தவறு என்பதே அறிஞர் முடிவாகும்.[1] அலி (ரலி) அவர்களுக்கும் மாவியா (ரலி) அவர்களுக்கும் நிகழ்ந்த மோதல்களையும் எசீதினால் நாயகத்தின் பேரர்கள் அனுபவித்த கொடுமைகளையும் 'ஷீயா' பிரிவினர்களின் கருத்தை ஒட்டியே இக் காப்பியத்தில் படைத்துள்ளார். அதே சமயத்தில் அபூபக்கர் (ரலி) உமர் (ரலி) உதுமான் (ரலி) ஆகிய மூன்று கலாபத் தலைவர்களையும் ஸுன்னி பிரிவினரின் கருத்துகளுக்கு மாற்றமில்லாத வகையில் சித்திரித்திருக்கிறார்.

ஆனால், இந்நூலின் முதற் பதிப்பில் கண்டதுபோல மாவியா, எசீது ஆகியோரை ஏக வசனத்தில் 'அவன், இவன்' எனக் கவிராயர் குறிப்பிட்டிருப்பதால் அவ்விருவர் பற்றிய கொள்கையில் இவருக்கு மாற்று எண்ணமில்லை என்பது தெளிவாகிறது. பாட வேறுபாடுகள் பற்றித் தம் பதிப்புரையில் 'ஹசன்' குறிப்பிடுவதிலிருந்து இது வலுவாகிறது. ''கண்ணகுமது மகுதூ முகம்மதுப் புலவரின் முதற் பதிப்புக்கும் இரண்டாம் பதிப்புக்கும் இடையே பாட வேறுபாடுகள் நிறையக் காணப்படுகின்றன. முதற்பதிப்பில் ஹலரத்முஆவியா (ரலி) அவர்களை 'அவன் இவன்' என்று ஏக வசனமாகவே குறிப்பிடப்பட்டுள்ளது. அப் பதிப்பு மார்க்க அறிஞர்களிடமிருந்து கடுமையான எதிர்ப்பைத் தோற்றுவித்திருக்க வேண்டும். அதனால் தான் இரண்டாம் பதிப்பில் அவ்வளவும் மாற்றப்பட்டு 'அவர், இவர்' என்று மரியாதையாகவே குறிப்பிடப்பட்டிருக்கிறது''[2]

---

1. ஹசன், 'கனகாபிஷேக மாலை', பதிப்புரை, 1990.
2. கனகாபிஷேக மாலை, 1990, பக். xvii.

## காப்பியம் கூறும் கதை

இக் காப்பியத்தில் கதையோட்டமானது நேர் போக்குடையது. நபி பெருமானின் ஆட்சியின் கீழ் அரபு நாடு சீரும் சிறப்பும் பெற்றுத் திகழ்கிறது. அவ்வரபு நாட்டில், தீமைகளின் அரசனாம் இபுலீசு நுழைவதற்கும் அஞ்சும் நிலையில் பெருமை கொண்டதாக இலங்குகிறது, 'மதீனம்' எனும் நகரம்.

நபிகள் நாயகமும், வானவர் தலைவர் ஜிபுறயேல் (அலை) அவர்களும் உரையாடிக் கொண்டிருந்தனர். நாயகத்தின் பேரர்களுக்குச் சொர்கத்தின் கனியை ஜிபுறயேல் (அலை) அளித்திருந்தார். அதனைப் பறிக்க இபுலீசு (சைத்தான்) முயற்சி செய்தான். அவனை விரட்டிவிட்டு, அவர் பேரர் களுக்குப் பின்னர் நிகழப்போகும் அவல மரணத்தை ஜிபுறயேல் (அலை) எடுத்துரைத்தார். கர்பலா மண்ணை ஜிபுறயேல் நாயகத்திடம் கொடுத்தார். அதனை அவர் மண் சிமிழிலிட்டு மனைவியார் உம்முசல்மாவின் வீட்டில் வைத்தார். இஃதறிந்த மகள் பாத்திமா வருந்திப் புலம்பினார். நபியன்பர்கள் ஆறுதல் கூற வந்து சென்றனர். நபித் தோழர் மாவியா தனித்து வந்து வினவிய போது 'மாவியாவின்' புதல்வனா லேயே அத்தீச் செயல் நிகழ்த்தப்படும் என நாயகம் கூறினார் கள். மாவியா வருந்தி மகப்பேறு இல்லாதிருக்கத் தம் மனை வியைத் துறந்தார். ஷாம் நகரின் அரசுப் பதவியை நாயகம் அவருக்கு நல்கினார்கள். ஒரு நாள் மாவியா சிறுநீர் கழித்துச் சுத்திகரிப்பதற்காக மண் கட்டியைத் தேடிக் கிடைக்காததால் மண் சுவர் இடிவில் வைத்துச் சுத்தம் செய்ய முயன்றார். ஒரு தேள் அவரின் மறைவிடத்தில் கொட்டியது. வைத்தியர்கள் இவ் விச நோய் மாற ஒரு மங்கையைப் புணருமாறு கூறினர். ஒரு விருத்தையை மணந்து (பேறில்லாக் கிழவி—நான்கு பெண் பருவங்களில் ஒன்று) புணர்ந்தார். அவள் கர்ப்பம் தரித்து எசீதை ஈன்றெடுத்தாள்.

மறுவான் எனும் தீயனை முனிந்து நபியவர்கள் மதீனத்தி லிருந்து புறத்தாக்கினார்கள். சில நாட்களில் நாயகம் காய்ச்சலால் பாதிக்கப்பட்டார்கள். அபூபக்கர் (ரலி) அவர் களை அழைத்துக் கிலாபத் பதவியை அவர்களுக்கு அளித்தார் கள்-நபிகள் நாயகம் இவ்வுலகு நீத்துச் சொர்க்கம் அடைந் தார்கள்.

அபூபக்கர் அரசாட்சி புரிந்தார். நாயகத்தின் மகள் பாத் திமா (ரலி) அவர்களும் இவ்வுலகு நீத்துச் சொர்க்கம் புக்கனர்.

இதன்பின் அபூபக்கரும் (ரலி) உலகு நீத்தார். அவருக்குப்பின் மதீனத்தரசராக உமறுகத்தாப் (ரலி) தேர்ந்தெடுக்கப்பட்டார். நாயகத்தின் மருகரான அலி (ரலி) அவர்களை 'கைசறில்' போர் செய்ய, உமறுகத்தாப் அனுப்பினார். கைசறைக் கைப்பற்றிய அலி (ரலி) மகதி என்பவரை அரசுரிமையாக்கிப் பெரும் பொரு ளுடனும், நவசேருவானின் மூன்று மக்களுடனும் மதீனம் வந்தார்கள். மருவானின் மகன் அறுமன் இசுலாம் ஏற்க மறுத்ததனால் தண்டிக்கப்பட்டு மடிந்தான். சகருவான், நாசுநூசு எனும் இரு பெண் மக்களும் 'கலீமா' பகர மறுத்த போது, உமறுகத்தாப் (ரலி) சினந்து தண்டிக்க முனைந்தார். அப்போது அலி (ரலி) அதனைத் தடுத்து அப் பெண்களைச் சில காலம், நாயகத்தின் மனைவியார் உம்முசல்மாவிடம் ஒப் படைத்து இறை வேதம் கற்பிக்கச் செய்தார்.

சில நாட்களின் பின் அவர்களை அரசர் முன்னிறுத்தி அவர்கள் மறை கற்ற விதத்தைக் காட்டச் செய்தார் அலி (ரலி), அப்பெண்களில் ஒருத்தியான சகருவானை மணக்க அரசர் விரும்பினார். சகருவானின் வேண்டுகோளின்படி சுயம்வரம் ஏற்பாடு செய்யப்பட்டது. பன்னாட்டு அரசர்களும் இளவரசர் களும் வீரர்களும் கலந்து கொண்டனர். தனது அண்ணனைக் கொன்றவர் எனக் கூறிச் சகருவான் 'உமரை' மறுத்தாள். தன்னைத் தண்டனையிருந்து காத்தவர் தந்தை போன்றவரென அலி (ரலி)யை மறுத்தாள். அலியின் புதல்வர் 'ஹசனை'ச் சகோதரன் போன்றவரென நீக்கினாள். யசீது முதலானோரைச் துச்சமாக ஒதுக்கி அலி (ரலி)யின் இரண்டாவது புதல்வரான உசைனுக்கு மாலையிட்டாள். யசீது பகைமை கொண்டான். சகர்வானின் தங்கை 'நாசுநூசு' அபூபக்கரின் மகனை மணந்தாள்.

கைசறிலுள்ளோர் இறைவழிக்கு எதிராகச் செயல்படலறிந்த உமர் (ரலி) மகதிக்கு உதவியாகப் படைகளை அனுப்பி அவர் களைத் தண்டித்தார். இவ்வாறு பன்னிரண்டரை யாண்டுகள் உமர் (ரலி) இறை வழியில் அரசோச்சினார். அபுலூல் என்பவர் ஓர் திறமை மிக்க அடிமைப் பையனை வாங்கி வணிகம் முடித்து மதீனம் வந்தார். நெஞ்சில் கரவுடைய அவ்வடிமைப் பையன் உமறு (ரலி) அவர்களைச் சென்றடைந்து அவரது பணி யாளன் ஆனான். நிறைய உருவங்கள் செய்து வணங்கினான் அக்காபிர் பையன்; உமறு தண்டனை கொடுத்துப் பின் விடு வித்தார். ஒரு நாள் உமறு அவர்கள் காலைத் தொழுகைக் காகப் (பஜர்) பள்ளி சென்ற போது மறைந்திருந்த அவ்வடிமை கத்தியால் அவரைக் குத்திவிட்டு ஓடினான். இறையன்பர்கள்

உமறு (ரலி) அவர்களைக் கண்டு பதறினர். அவரது இறப்பு உறுதியெனவறிந்து யாரை அடுத்த 'கலீபா' ஆக்குவது எனக் கேட்டனர். 'இறை நேசர்களாகிய நீங்கள் எனைத் தலைமை பீடத்திலாக்கினீர்; அதுபோன்றொருவரை நீங்களே தேர்வு செய்க' என்று கூறி இவ்வுலகு நீத்தார். அவரை நபியவர்களின் அடக்கத்தலத்திற்கருகில் அடக்கம் செய்யச் 'சகாபிகள்' (இறை நேயர்கள்) விரும்பிக் கொண்டு சென்றனர். பெருமானாரின் 'கபறு' திறந்தது (புதைகுழி). உமரை இடது பக்கமும், அபூபக்கரை வலது பக்கமும் நபிகள் பெருமானார் (சல்) தழுவிக் கொண்டிருப்பதை இறைநேசர்கள் கண்டு மீண்டனர்.

இதன் பின்னர் கிலாபத் பதவி யாருக்கு எனும் போட்டி நிகழ்ந்தது. பிற மன்னர்கள் மதீனாவில் குழுமினர். உமறின் மைந்தர் மாசீமுக்குக் 'காலிப்பட்டம்' வழங்கப் பட்டது. அரசராக யாரை நியமிப்பது என ஆலோசனை செய்தனர். உதுமான், அலி, அப்பாஸ், அலியின் புதல்வர் இவர்களில் யாரையேனும் தேர்ந்தெடுத்திடுக என்றார் ஒரு மன்னர். அப்பாசும், அலியும் மறுத்தனர். அப்போது 'சாம்' நகரரச ரான 'மாவியா' உமையாகுலத்து 'ஆசீன்' என்பவரிடம் நம் குலத்துதித்த ஒருவரைத் தலைவராக்குக என்றார். 'ஆசீம்' கோத்திரம் இணையிலா வலிமை பொருந்தி வருகிறது எனவும் குறிப்பிட்டார். அவரால் கணையாழி ஒளித்து வைக்கப்பட்டது. இதனையறிந்த அலி (ரலி) மாவியாவிடம் 'இறைவனுக்கு அடுக்காதன செய்யற்க' என உரைத்து மீண்டார். மறுநாள் மன்னர்கள் குழுமியிருந்தபோது மாவியா உதுமானை அரசராக்கலாம் என உரைத்தார். மக்களும் ஏற்றனர். உமறு மைந்தர் முகம்மதபுபக்கர் 'மிசுறு' மன்னர் ஆக்கப்பட்டார். மாவியாசாமினுக்கும் திமிசுக்கும் மன்னர் ஆனார்.

இவ்வாறிருக்கும்போது வஞ்சகனான மறுவான் என்போன் உதுமான் (ரலி) அவர்களின் அமைச்சனானான். மறைமுகமான சூழ்ச்சியினாட்பட்டிருந்தான் அவன். அஃதறியாத உதுமான் (ரலி) சகுபிகள் கூடிய சபையில் எனக்குப்பின் மறுவானை அரசனாக்குங்கள் என்று கூற இறை நேசர்கள் மனம் வருந் தினர். மிசுறு அரசரான மகமது மாசீம், அபூபக்கர் ஆகியோர் உதுமான் (ரலி) அவர்களின் நோக்கம் சரியன்று என ஓலை எழுதினர்.

ஆஷீம் குலத்தவர் தாம் கொடுமைப் படுத்தப்படுவதாக எழுதியதறிந்து மிசுறு நாடடைந்து குடிகளின் துன்பம்

நீக்கினார் முகம்மதுவின் தம்பி அபூபக்கர் (உமறின் புதல்வர்). அவ்வபூபக்கருக்கு மனமகிழ்ந்தொரு நற்செய்தியனுப்ப விரும்பினார், உதுமான் (ரலி). அச்செய்தியை எழுதுமாறு மறுவானைப் பணித்தார். அவன் சூது செய்தான். உதுமான் (ரலி) எழுதியது போல இரு கடிதங்கள் எழுதினான். ஒன்று அபூபக்கருக்கு, ஷாம் நகர் சென்று அரசராக இருங்கள் என்று எழுதப்பட்டது. மற்றொரு கடிதத்தை 'ஷாம்' நகர மக்களுக்குச் சிலேடை வைத்து எழுதினான். அதன்படி, அழகிய வேந்தனாக ஏற்றுக் கொள்ளுங்கள், என ஒரு பொருளும், 'பூமியினிடத்து உயிரொடு நிலையாத வகைப்படுத்துங்கள்' என மறை பொருளும் அமையுமாறு எழுதினான். அரசு இலச்சினை இடப்பட்ட அக் கடிதங்கள் இரண்டும் அபூபக்கருக்கும் மிசுறில் அவர் ஆதரவாளர்க்கும் கிடைத்தன. அபூபக்கர் உதுமானைச் சந்தேகித்துப் பகை கொண்டு மதீன நகர் நோக்கிப் படையுடன் வந்தார். உதுமானும் அபூபக்கரும் சந்தித்தனர். 'சால்புறும் அரசர் நீதி தவறுதல் முறைமையோ' என முறையிட்டார். மிசுறு வேந்தர் றமலான் மாதம் மதீனத்துள் நுழைந்தார். உதுமானின் (ரலி) கனவில் நபிகள் நாயகம் தோன்றி உமது இறுதிக் காலம் வந்தது என்று கூறினர். விழித்த உதுமான் (ரலி) காவலரைக் கூவி வேண்டுவன செய்யச் சொன்னார். மிசுறு அரசரும் ஹாஷீம் வீரரும் அரண்மனை சூழ்ந்த செய்தியை வீரர்கள் உதுமானுக்குக் கூறினர். உடனே 'அலி' அவர்களை உதவிக்கு அழைத்து வருமாறு தூதனுப்பினார். இஃதறிந்த அலி (ரலி) யும் அசன், உசைன் முதலியோரும் மனம் நொந்து விரைந்தனர். அலி மைந்தரை அரண்மனை முன் வாசலில் காவலிறுத்தினர். உமையர்குலத்தாரை ஹாஷிம் குலத்தார் துன்புறுத்தினர். முன் வாசலில் அலியின் புதல்வர் இருப்பதனால் பின் வாசல் வழி உட்புகத் திட்டமிட்டனர். சில பேர் அவ்வாறு புகுந்து உதுமான் (ரலி) அவர்களைக் கொன்றனர். வேதத்து றசூலின் உரைக்கு மாறாய் அரசாண்டீர், எனக் கூறி இகழ்ந்தனர். 7 நாட்கள் அடக்கம் செய்யாது முகம்மது அபூபக்கர், உதுமானின் உடலை மனையில் காத்தார். அலி (ரலி)யின் வேண்டுகோளுக்கு இசைந்த மிசுறரசர் உதுமானின் சடலந்தனை நீர் நிலையருகே அடக்க ஒப்பினார். உன்னியது முடித்த மறுவான் ஷாம் நகருக்குச் சென்றான்.

மதீனத்தரசராக அலி (ரலி) அவர்களுக்கு முடி சூட்டினர். திமிசு முதலான பிற நகரரசுகளும் அலி (ரலி) அவர்களால் வெற்றி கொள்ளப்பட்டன. மாவியாவின் மகன் எசீது கோல நகரழித்துத் தன்னூர் வந்தனன். மறுவானை வரவழைத்

தனர். அவன் அலி (ரலி)யைக் கொல்ல ஆலோசனை கூறினான். அலியுடைய வலிமையைக் காண்போமென வஞ்சினம் கொண்ட மாவியா மதீனத்தில் தனக்கு உரிமையுள்ளதெனத் தம் ஆதர வாளர்களைப் போர் செய்யத் திரட்டினார். தம் வீரர்களை எண்திக்குகளிலும் சென்று கொள்ளையிடப் பணித்தார் மாவியா. மக்கள் அலி (ரலி) அவர்களிடம் சென்று முறை யிட்டனர். பஞ்சம் ஏற்பட்டது. அலி (ரலி) அரசுப் பண்டாரத்தி லிருந்து (பைத்துல்மால்) பொருளும், தானியமும் கொடுத்து மக்களின் துயர் போக்கினார். மாவியா மதீனத்திற்கான வழிகளை அடைத்தார்.

மாவியாவின் தூதனிடம், உதுமானின் அழிவுக்குக் காரண மான மறுவான், மாவியாவின் அழிவுக்காகவே அங்கு வந்த டைந்துள்ளான். அப்புல்லனுரை கேட்க வேண்டா' மெனக் கூறியனுப்பினார். மாவியா, நாட்டுக்கரசு நானே எனக் கறுவினார். இருபத்து மூன்று நாட்கள் போர் நிகழ்ந்தது. அலியார் படைவெற்றி பெற்றது. கரந்து சென்ற மர்வியா கலங்கித் தம் திமிசுக்கேகினார். அலியைக் கொல்ல வஞ்சரை அனுப்பினார். அவர்களால் இயலவில்லை என அறிந்து மாந்திரீ கத்தால் கொல்ல முனைந்தார், அதுவும் பலிக்கவில்லை. கெந்துப்பீர் என்பான் அவரைக் கொன்று வருவதாகக் கூறி வாளுடன் மதீனம் சென்று இரவில் 'துல்துல்' குதிரையைக் காண வந்த அலியாரைக் கொல்ல முனைந்து தோற்று ஓடி ஒளிந்தான்.

ஒரு கூனியக் கிழவி ஒருத்தி தான் சென்று, கொன்று வந்தால் பெரும் பொருள் தர வேண்டுமெனக் கேட்டு ஐந்து இளம் பெண்களுடன் மதீனம் சென்றாள். அலியாரின் மாளி கைக்கருகே மாளிகையொன்றில் குடியேறிக் காளையரை மயக்கும் விதத்தில் அப் பெண்களை அலங்கரித்து உலவ விட் டாள். அப்பெண்டிரின் சூழ்ச்சி வலையில் அலியாரின் ஏவல் பணியாளன் ஒருவன் வீழ்ந்தான். அலியாரைக் கொன்று வான் பொருள் கொண்டு இப் பெண்டிரோடு இனிது வாழ்வாய் என அக் கிழவி சொன்னதை ஏற்றான் அவன்.

அலியாரின் கனவில் 'றசூல்' தோன்றி விரைவில் நம்பால் வருகவெனச் சொன்னார். உண்மையாளரான றசூல் கூறிய தால் விரைவில் பலிக்குமென மனம் நலிந்தார் அலியார். பள்ளி யில் சென்று பஜருதொழத்தனியே சென்றார். தொழுது சுஜூதுச் செய்தபோது உமையாகுலத்துக் கயவன் அலியாரைக்

குத்தினான். பின்னர் கண் தெரியாது அறிவு குலைந்தான் அவன். அவனை மன்னிக்குமாறு அலியார் இறை நேசர்களிடம் கூறினார். அசனை அரசேற்கக் கூறினார். தம்பியர் எண் மருக்கும் நலங்கூர் பதிகளைக் கொடுத்தனுப்புக என்றும், மாவியாவின் நகரை வளைத்துப் பிடித்துக்கொள் என்றும் இயம்பினார். இவ்வுலகு நீத்தார். அவருடலைச் சந்துக்குல் வைத்துப் புதல்வர் எடுத்துச் சென்று மேற்கிலுள்ள மலையில் இறக்கி வைத்து நீக்கினர். வானவர்கள் அதை எடுத்துச் சென்றனர். மாவியா அரபு நகரங்களை அழித்துக் கொள்ளை யிட்டு இனி தமக்குப் பயமில்லை எனக்கருதி மறுவானோடு மகிழ்ந்திருந்தார்.

அசனார் அரசோச்சிய காலத்தில் மாவியா இறை செலுத்தா திருந்தார். அசனார் படையுடன் ஷாம் நகரையடைந்தார். மாவியா எண்பது நூறாயிரம் காசும், பொருளும் இறையாகக் கொடுத்தனுப்பினார். பிற அரசர்கள் தீனையழிப்பித்தமாவியா வின் வலிதனையடக்கி வந்தவரென்று அசனாரைப் புகழ்ந்தார் கள். திருந்தியவன் போல் நடித்த 'எசீது' தன் தீயகுணத்தைக் காட்டத் தொடங்கினான். காமமெனுங் கொடிய நோய் கொண்ட எசீது மதீனாவில் வாழும் அப்துல்லா என்பவரது மனைவியை மாடத்தில் உலாவக் கண்டு ஆசை கொண்டான். நோய் முற்றிப் படுக்கையிலானான். நோய் மருத்துவர்களின் சிகிச்சையில் தீரவில்லை. அவன் மனத்தாசை தீர்ந்தால் நோய் தீரும் என்றனர். எசீதின் தந்தை மாவியா, அப்துல்லாவிற்கு ஆள் விட்டழைத்து அவன் எண்ணம் கூறினார். அப்துல்லா தம் மனைவியைத் தலாக் கூறினார் (விவாக ரத்து). அவள் எசீதை மணக்க மறுத்து அசனாரின் தம்பி ஹுசைனை மணக்க விருப்பம் தெரிவித்தாள். ஹுசைனுக்கு அப் பெண்ணைத் திருமணம் செய்வித்தனர். எசீதின் வன்மம் அதிகரித்தது.

அசனார், றசூலைக் கனவில் கண்டார். செய்ய வேண்டிய வற்றை விரைவில் முடித்துச் சொர்க்கத்தில் எனை வந்தடைக என்றார். மாவியா திறையனுப்பாமையால் அசனார் படை யெடுத்தார். மாவியா திறை செலுத்த ஒப்பினார். அசனார் மதீனம் சென்றார். மாவியா இனி என் செய்வோமென மனச் சஞ்சலங் கொண்டு ஆசனத்திலிருந்து வீழ்ந்து பின்னர் மடிந் தார். மறுவான் எசீதைத் தேற்றினான். எசீது திமிசு, சாம், நகரங்களுக்கு அரசன் ஆனான். அசனாரைக் கொல்ல எண்ணங்

கொண்டான். அசனாரைக் கொன்றால் 'பைத்துல் மால்' பொருளெல்லாம் தனக்காகும் எனக் கருதித் திட்டமிட்டான். மரபினக் குடிகள் விலங்குகளால் பயிர்கள் நாசமாகின்றன; காக்க வேண்டுமென அசனாரிடம் கூறினார். அசனார் வேட்டை முடித்துத் தாகத்திற்கு ஏவலாளரிடம் பானங் கேட்டார். எசீதினால் ஏவப்பட்ட ஒரு கிழவி விசம் கலந்த பானத்தைக் கொடுத்தனுப்பினாள். விசமருந்தி அசனார் மடிந்தார். உறவினரும் இறை நேசரும் உளங் கலங்கினர். அதன் பின் உசைனார் அரசப்பதவியேற்றார்.

'உசைன் வலியடங்கினான்; இனி மதீனம் என்னகப்பட்டது' என எசீது உளம் மகிழ்ந்து திட்டம் தீட்டினான். மதீனம் தனக்குச் சொந்தம் என்றும் உசைனார் புறநகர் செல்ல வேண்டுமென்றும் எசீது கடிதம் அனுப்பினான். மதீன நகர் விட்டு வேறு நகர்க்குச் செல்க என்று றசூலின் சத்தம் கேட்டார். உற்றாரோடு கறுபா சென்றடைந்தார். கறுபாவுக்கான வழிகளை எல்லாம் அடைத்து மதீனத்திலிருந்து உசைனாருக்கு உதவி வராதவாறு தடுத்தான் எசீது. தனது ஆதரவுப் படைகளைக் கொண்டு குவித்தான். உசைனாரிடம் நேயமான சிலரும், எசீதின் படையுடன் பொருதி மடிந்தனர். அசனாரின் மகன் காசீம் பொருதி மடிந்தார். உசைனாரின் மகன் அலிஅக்குபாலும் மடிந்தார். தண்ணீர் வேட்கை கொண்ட அவரது சிறு குழந்தைக்கு நீர் கேட்டபோது எதிரிகள் அம்பெய்து அப்பைதலைக் கொன்றனர். உசைனாரின் தலை வெட்டப்பட்டது. உசைனாரின் குதிரைப் பையன் கண்களை இழந்தான். உசைனாரின் தலையுடன் மனைவியும், மக்களும், அவரது உடன்பிறப்பான அசனின் மகனான செயினுலாபுதீனும் சார்பாளர்களும் கைது செய்யப்பட்டு அழைத்துச் செல்லப்பட்ட போது, சறாயீல் எனும் நல்லெண்ணமுடைய வணிகர் அவர்களைக் கண்டார். அவர்களை மீட்கும் வழிதனைத் திட்டமிட்டு உசைனாருக்கு வேண்டிய அரசர்களுக்கும் மதீன மக்களுக்கும் தூதனுப்பி ஒன்று திரட்டினார்.

உசைனாரின் தலையை வெட்டிய பூனைக் கண்ணன் நாய் முலையனான ஜங்கி கள்ளருந்திய வெறியால், முன் பின் தெரியாத அவ்வூர்த் தலைவாரியான 'சகுதி' என்பாரிடம் அத்தலையை வைத்திருக்குமாறும் மறுநாள் வந்து வாங்கிக் கொள்வதாகவும் கூறிக் கொடுத்தான். வீட்டில் சகுதியும் அவர் தம் மனைவியாரும் அது உசைனார் தலையென அறிந்து

வருந்தி அதைக்காத்து அடக்கம் செய்ய எண்ணினர். மறுநாள் குடிகாரனான ஜங்கி வந்து கேட்டபோது தமது பிள்ளையின் தலையை அறுத்து 'உசைனார்' தலையெனக் கொடுக்க அவன் அஃதல்லவென மறுத்தான். இவ்வாறு ஏழு பிள்ளைகளின் தலையையும் வெட்டினர். இறைவனிடன் சகுதி வேண்டியதற் கிணங்க ஏழாவது பையனின் தலை ஜங்கிக்கு உசைனார் தலை போலக் காட்சியளித்தது; அவன் அதனைக் கொண்டு சென் றான். உசைனாரின் தலை மதீனம் கொண்டு செல்லப்பட்டு உடலுடன் நல்லடக்கம் செய்யப்பட்டது.

நூற்றுப்பத்துப் பேரோடு சறாயில் இசிக்கிலான் நகரடைந் தார் உமையார் குலத்தாருக்கு உசைனார் மடிந்த வரலாறு உரைத்தார். அந் நகரின் அரசராக்கப்பட்டார். உசைனாரின் உற்றாரும், உறவினரும் எசீதால் சிறையிலடைக்கப்பட்டனர். எசீதின் படை இசிக்கிலான் நகரை முற்றுகையிட்டது. சறாயில் இல்லாத நேரமாயினும் அவர் தம் சகோதரி 'பாத்திமா', பெண்கள் அனைவரையும் போருடை அணிவித்து எசீதின் படை யுடன் பொருதி விரட்டினார். தோகாந்துருக்கியெனும் வலிமை மிகு அடிமையை 'உரிமை விட்டு' எசீதின் படையுடன் மோதச் செய்தார் சறாயில்.

உமறு, சகுமறு, தையாறு, முகம்மது கனீபா ஆகியோர் விசிக்கிலான் நகரை வந்தடைந்தனர். யசீதின் படை நடத்திய அப்துல்லாசையாதும் சறாயீலின் படை நடத்திய 'முசிபும்' பொருதினர். அப்துல்லா சையாதை வீரர்களிடம் ஒப்படைத்துத் தண்டிக்கக் கூறினார், முகம்மது கனீபா (அலி சேய்). அப்துல்லாசையாதின் கைகள் வெட்டப்பட்டன. நாவினைப் பிளந்தனர். அவ்வாறு செய்து கழுவின் மேல் ஏற்றினர். போரில் தோற்ற எசீது ஓடிப் பதுங்கினான்.

திமிசு வாழ் 'உமையா' குலத்தோர் அஞ்சிட வெற்றி பெற்று, திமிசினில் சிறைப்பட்டிருந்த செய்னுலாபிதீன், நேரிழை மாதர் ஆகியோரை விடுவித்தனர். எசீது மனநோய் கொண்டு உசைனே யென்னை வீணிலேன் வெட்டுகின்றாய்; வெட்டலென்றுரைத்து உப்பரிகை மேலிருந்து விழுந்தான்; மரக்கொம்பு உடம்பினைத் துளைத்துத் தலை வழியே ஊடுரு வியது (கழுவேற்றியது போல்). எசீதின் மகனுக்கு 'மறுவான்' முடிசூட்டுவித்த செய்தியை அறிந்த முகம்மது கனீபா முதலா னோர் 'மறுவானைக் கனற்கிரையாக்க வேண்டுமென வெகுண்

டெழுந்தனர். அவனைக் கொடுந்தீயிலிட்டார்கள். பின்னர் அனைத்து நகர அரசர்களும் கூடி அசனாரின் மகன் செயினுலாபிதீனுக்கு முடிசூட்டி அரசராக்கினர்.

இவ்வாறான கதையமைப்பை இயம்பிய இக்காப்பியம், 'இசுலாம் வாழி; பொருவிலா நபியின் புகழ் வாழி; இந்நூல் படித்தோர் வாழி' என வாழ்த்துப்பாடி முற்றுப் பெறுகிறது.

# காப்பியக் கூறுகள்

'கனகாபிஷேக மாலை' காப்பியக் கூறுகள் அனைத்தும் கொண்ட தொடர் நிலைச் செய்யுள் ஆகும். காப்பியம் என்ற சொல் 'பொருள் தொடர் நிலை'யைக் குறிப்பது ஆகும். 'கவியால் பாடப்படுவன எல்லாம் காப்பியம் அன்றோ ?பொருள் தொடர் நிலையைக் காப்பியம் என்றது என்னையெனின், சேற்றுள் தோன்றுவன எல்லாம் பங்கயம் எனப் பெயர் பெறுமாயினும் அப்பெயர் தாமரை ஒன்றின் மேற்றே ஆயின வாறு போல இப் பெயர் பொருள் தொடர் நிலைக்கே ஆயிற்று' என்கிறார் தண்டியலங்கார உரையுள் சுப்பிரமணிய தேசிகர். பின்னர் கதைப் பொருளுடைய காவியத்திற்கு இது பெயராக ஆயிற்று என்பர்.

சிலப்பதிகாரம், இராமகாதை, சீறாப்புராணம் என்பது போன்று 'மாலை' என்ற சொல்லை இணைத்துக் காவியப் பெயரிடும் முறை மிகுதியும் இசுலாமியக் காப்பியப் புலவர் களிடம் காணப்படுகிறது. மேலும், 'கனகாபிஷேக மாலையில் பல இறை நேசர்களின் வரலாற்று நிலைகள் மாலை போலத் தொடுக்கப்பட்டிருப்பதால் இப்பெயர் இக்காப்பியத்துக்கு மிகப் பொருத்தமாக அமைந்துள்ளது என்றே கருதலாம்.

'வனப்பு' வகையில் 'தொன்மை' என்பது காப்பிய வகையைக் குறிக்கிறது என்பர். இதனைத் தொல்காப்பியம்,

**தொன்மை தானே**
**உரையொடு புணர்ந்த பழமை மேற்றே**

(தொல். 1493)

எனக் குறிப்பிடுகிறது. மேலும்,

**இழுமென் மொழியான் விழுமியது நுவலினும்**
**பரந்த மொழியான் அடி நிமிர்ந்து ஒழுகினும்**
**தோல் என மொழிப தொன்மொழிப் புலவர்''**

(தொல். 1494)

எனும் நூற்பாவில் ''தோல்'' எனும் இலக்கியப் பகுப்பும் காப்பிய வகையாகச் சுட்டப்படுகின்றது. பொருட் தொடரைக் குறிக்கும் 'இயைபு' என்பதும் காப்பியத்தைக் குறிக்கிறது.[1]

விருந்து எனும் வனப்பு, புதுமை எனப் பொருள் படுகிறது. பழைய பொருண்மையைக் கதையாகத் தரும் தொன்மை என்பது, தோலுக்கு மாறுபட்டதாகத் தென்பட்டதாயினும் அதுவும் காப்பிய இயல்பினைக் கொண்டதேயாகும்.

ஆசு, மதுரம், சித்திரம், வித்தாரம் எனும் நான்கு கவி வகைகளில் வித்தாரக் (அகல) கவியில் காப்பியத்தை உட் படுத்தும் முறை யாப்புபாட்டியல் நெறியாக அமைந்துள்ளது. பாட்டியல் நூலில் தொடர்நிலைச் செய்யுள் தலை, இடை, கடை என மூன்றாகப் பிரிக்கப்பட்டுள்ளது. இவ்வாறான, இலக்கண நூல்கள் காப்பியக் கூறுகளைப் பல நிலையில் வகைப் படுத்துகின்றன. இவற்றில் சில முக்கியக் கூறுகளாகப் பிரிக்கப் படுகின்றன.[2]

1. நூன் முகம்—வாழ்த்து, வணக்கம், வருபொருள் என்பன.
2. நுவல் பொருள்—காப்பியப் பொருட்களான அறம், பொருள், இன்பம், வீடு ஆகியன.
3. காப்பியத் தலைவன் தன்னிகரில்லாதவனாகப் படைக் கப்படல்.
4. இயற்கை வளம் முதலிய வருணனைகள்.
5. நன்மணம் புணர்தல், புனல் விளையாட்டு, சிறுவர்ப் பெறுதல் முதலான அக வாழ்வு.
6. மந்திரம், தூது, செலவு, இகல், வென்றி முதலான புறவாழ்வு.

---

1. ச. வே. சு., காப்பியப் புனைதிறன், தமிழ்ப்பதிப்பகம், சென்னை, 1979, பக். 14.
2. 1. S. David, 'The Epic Structure of Civakacinta-mani, St. Joseph Press, Trivandrum, 1981.
   2. T.E. Gnana Murthy, 'A critical study of Civakacintamani', Kalaikathir, Coimbatore, 1966.
   3. மு. அப்துல கறீம், சீறாப்புராணத் திறனாய்வு, ஆயிஷா பதிப்பகம், அதிராம் பட்டினம், 1980.

7. புற அமைப்பு, காண்டம் – சருக்கம் – படலம் என அமைதல்.
8. அக அமைப்பு – சந்தி அமைப்பு – காப்பியக் கட்டுக் கோப்பு–கதைப் போக்கு என்புதன் அக அமைப்பு – நாடகத்தில் தொடக்க நிகழ்ச்சி, திருப்பு மையம் அல்லது சிக்கல், உச்ச கட்டம், வீழ்ச்சி, முடிவு என்பன போன்று காப்பியத்திலும் அமைதல்.
9. சுவையும் மெய்ப்பாடும் (விறல்).
10. யாப்பும் மொழி நடையும்.

## நூன் முகம்

நூன் முகம் என்பது வாழ்த்து வணக்கம் வருபொருள் ஆகியவற்றை உரைத்தலாகும். தமிழ்க் காப்பிய மரபினைப் பின்பற்றிடும் கனகவிராயர் தமது கனகாபிஷேக மாலையில் தெளிவாக நூன்முகத்தை அமைத்துள்ளார்.

**கார்கொளந் தரத்தின் சசியென வேறா**
**கியுங்கவி னெகின்பழத் தோட்டை**
**நேர்கொளக் கலந்தும் பிரிந்தும்யா வினுமார்**
**நிமலனை நினைபன்பிற் பணிவாம்.**

எனும் காப்புச் செய்யுள் பாடி எல்லாம் வல்ல பரம்பொருளின் காப்பைத் தேடுகிறார் புலவர். இதன் பின் 'கடவுள் வாழ்த்துப் படலம்' என்று ஒரு படலமே அமைத்து வாழ்த்து, வணக்கம் ஆகியவற்றை இயம்பி விடுகின்றார்.

**பூவினின் மருவும் பொற்பார் மணியினி லொளியும் போலென்**
**நாவினி லறிஞர் நெஞ்சி லுறைந்திடு நாதன் தன்னைப்**
**பூவினு வமையு மொவ்வாப் பயன்மறை யுதவ ருட்பூங்**
**காவினை நலருள் வாழ்வைக் கத்தனை வாழ்த்து வாமே** (1)

என்று பரம்பொருளாம் அல்லாவினைத் துதி செய்து தொடங்கு கின்றார் கனகவிராயர். இசுலாமியக் கொள்கையில் திளைத் தவர் இக்கவிராயர் என்றாலும், தமிழ்க் காப்பிய மரபு என்ற நிலையில் சில புறனடைகளையும் பின்பற்றக் காண்கிறோம். இசுலாத்தில் பரம்பொருளான இறைவனின் பாதத்தைத் தவிர மற்றோர் பாதத்தை வணங்கல் தடை செய்யப்பட்டதாகும். ஆனால் தமிழ் மரபில் வளர்ந்த கவிராயரின் கடவுள் வாழ்த்துப்

படலப் பாடல்களில் சில மாறுபட்ட கருத்துக்கள் தொனிக் கின்றன.

**இறையவ னருளு நூறாயிரத்திரு பத்து நாலாய்**
**நிறைதரு நபிகள் பாத நித்தமும் வழுத்து வேனே (7)**

**களையிலாப் பயிரே போலக் கவினபி கலிமா வித்தி**
**வளரபூ பக்கர் செந்தாமரைப் பதம் வழுத்து வாமே (8)**

**...உமறுகத்தா படியினை சிரமேற் கொள்வாம் (9)**

**ஆலி மலர்ப் பதம் வழுத்து வாமே (11)**

என்றெல்லாம் அமையும் பகுதிகளில் இதனைக் காணலாம். மேலும் அசனாரின் வழிவந்த அப்துல் காதர், நாகைப்பட்டின மேவிய சாகுல்ஹமீது ஆகியோரையும் வாழ்த்துகின்றார். இக்காப்பியத்திற்கு முதனூல் தந்தோர் அதனை விரித்துரைத் தோர் (17:18), காவியம் பாடப்பட்ட காலம் (விரோதிகிருது 1058), ஆகியவற்றையும் குறிப்பிடுகின்றார்.

இவருக்குப் புரவலராயிருந்த மதுரை கனக கொந்தாலகான் என்பவரை நூலின் பல இடங்களில் போற்றி வாழ்த்தும் முறையைப் பின்பற்றியிருக்கிறார் இக்கவிராயர்.

**நபிமுத லெண்மர் வேத நாயக ராகி யென்றுங்**
**கவினுற வுலகிற் செய்த கனகாபிஷேக மாலைப்**
**புவியினிற் றமிழி னாலே புகலமா நிதிய முய்த்தான்**
**றவமுய ரறிவன் கூடற் சைதுகொந் தால கானே (24)**

என்பது போன்று அப்பாடல்கள் அமைகின்றன.

**தேமலர் மரப மாலைத் தீனுளோர் பெரிது வாழ**
**மாமலர் வாவி சூழும் வயலகம் போ... மன்றிற்**
**கோமக னுசைனார் காதை குலத்தமி ...ங்கஞ் செய்தான்**
**காமரு காளை யன்ன கனகவி ராய... மாதோ (26)**

என்ற பாடலில் இக் காப்பியம் அரங்கேறிய செய்தியையும் தருகிறார். கவிராயர் தொடக்கத்திலும் முடிவிலும் வாழிபாடு கின்ற காப்பிய மரபைப் பின்பற்றியுள்ளார்.

**ஆதிதன் னருளும் வாழி யகுமது நயினார் வாழி**
**மூதறி வுடைய மேன்மை முறுசலீ னபிகள் வாழி**
**பேதமி னொலிமார் தீனோர் பெரியவர் சிறியர் வாழி**
**நீதமிற் படிப்போர் கேட்போர் நித்தமும் வாழி வாழி (27)**

**தீனுளோர் யாரும் வாழி திவ்விய வறங்கள் வாழி**
**மேனய நெறிகொள் செங்கோல் வேந்தர்கள் வாழி யிந்நான்**
**மானிலத் துறவெண் ணில்லா மாநிதி கொடுத்தக் கீர்த்தி**
**மானெழிற் கனக கொந்தா லகானுஞ்சுற் றமுமே வாழி**
**(2791)**

**சுந்தர மதிமும் மாரி பொழிந்தெவரும் வாழி யாமீன் (2792)**

நாட்டுப் படலத்தில் அரபு நாட்டின் இயற்கை வளம் கூறும் போது தமிழ் மரபைப் பின்பற்றி ஐந்நிலவர்ணனை படைத்துள்ளார் கவிராயர்.

**....அறபாத்தி னருவி பலவாம் வளக்குறிஞ்சி**
**நிலங்க டழுவி யெழுபாலை நீந்தி நிரைபோல்**
**வெருண்டனவால் (31)**

என்றும்,

**வெள்ள முரண்டு முல்லை நில**
**மேவி மருதத் தலம்புகுத**
**வுள்ள மகிழ்ந்து கழை நதிவந்**
**துற்றா ரங்கோ ரொருகோடி (32)**

என்றும்,

**குறித்தநா ணன்கு செய்து கோதற வெழுந்த நாற்றைப்**
**பறித்தனர் களமர் பற்றி யுழத்தியர் பல்லர்கூடிச்**
**செறித்தனர் முடியை வாரிச் சிந்தினர் கமலக் கையால் (35)**

என்றும் பாடியுள்ளது, கதை நிகழ்ச்சியின் சூழலைத் தமிழகச் சூழலுக்குக் கொண்டுவந்து விடுகிறது. மேலும் நெற்காடரியும் மள்ளர்கள் **கதிரவனை வணங்கித் தொடங்கினர்** என்றும் பாடுகின்றார்:

**வளர்வயற் குறுகி யாத வனைவழி படவணங்கி**
**யளவற விளையு நெற்கா டரிகிறா ரரிகிறாரே (40)**

இது இசுலாமியக் கொள்கையினின்று தனித்து நிற்கக் காணலாம். மேலும் அரபு நாட்டு வாவியெல்லாம் பகீரதி நிகர்க்கும், என்று பாடுவதிலும் தமிழ் மரபைப் பின்பற்றியிருக்கிறார்.

நகரப் படலத்தில் மதீனமா நகர் பற்றிய வருணனை சிறப்புற அமைந்துள்ளது. இக் காப்பியத்தில் மிசுறு, ஷாம்

முதலான நகர்கள் குறிப்பிடப்பட்டாலும் மதீனமா நகரிலேயே கதை நிகழ்ச்சிகள் பலவும் நடைபெறுகின்றன. மதீன மாநகரின் அகழி கடலை ஒக்கும் என்றும் (50), புறமதில் இமய மாமலை யென நிமிர்ந்து நிற்கிறதென்றும் (52), பாடுகின்றார்.

**இஞ்சிநாற் புறமும் பித்திகை யென்ன**
**வானெல்லை நிமிர்ந்துற லானு**
**மஞ்சுறு வான நீலமா மணியான்**
**முடிய சிகரத்தை மானத்**
**துஞ்சுபு விருத்த லானும்வா னுடுக்கள்**
**செறிமலர் மாலைபோ றலானும்**
**விஞ்செழின் கரமு கம்மதர் விவாக**
**வீட்டினை யிரவினி னிகர்க்கும்** (58)

என்று மதீனத்து வளத்தைப் பற்றிக் கவிராயர் பாடியுள் ளார். பிற தமிழ்க் காப்பியங்களில் தலைநகரின் வளத்தைப் பாடியுள்ள மரபைப் பின்பற்றி யுள்ளமை இதனால் தெளிவுறு கிறது.

பிற காப்பியங்களில் காணப்படாத ஒரு புதுமையாக இக்காப்பியத்தில் பதிகப்படலம் நான்காவது படலமாக வைக் கப்பட்டுள்ளது. பிறவற்றில் நூன்முகமாகப் பதிகம் அமைவது மரபாகும். இம்மரபு கனகாபிஷேக மாலையில் மீறப்பட்டிருக் கிறது. இசுலாமிய மரபின்படி எக்காரியம் தொடங்கினாலும், இறைவனின் புகழ்பாடித் தொடங்கல் வேண்டும். பதிக மரபில் இது சரியாயமையாததால் இரு மரபுகளையும் நிலைநிறுத்திப் பதிகப் படலத்தை இடையில் வைத்தார் எனக் கொள்ளலாம். மேலும், கனகவிராயரது 'பதிகம்' இந்நூலுள் கூறப்பட்டுள்ள வரலாற்றின் சுருக்கமாகவும் அமைகின்றது. 'பாயிரம்' (பதிகம்) என்பதற்கு வரலாறு என்றொரு பொருளமைவதினாலே இச் சுருக்கத்தை இடையில் வைத்தாரோவென்றும் ஐயுறலாம். இக் காப்பியத்தில் நான்கு தலை முறையின் வரலாறு கூறப்படு கிறது. நான்காவது தலை முறையினரான உசைனாரின் புகழ் பரப்புவதே இக் காப்பியம் எனக் கொண்டு காப்பியத்தின் தலையாய படலத்தை நான்காவதாக அமைத்திருப்பாரோ? எவ்வாறாயினும் தமிழ்க் காப்பிய மரபிலேயே இஃது ஒரு புதுமையாகக் கருதத் தக்கதாக அமைந்து விடுகிறது.

## நுவல் பொருள்

பெருங்காப்பியக் கூறுகளில் தலையாய நுவல் பொருள் களான அறம், பொருள், இன்பம், வீடு ஆகியவற்றை எடுத் தியம்புவது காப்பிய மரபு ஆகும். இவற்றில் குறையிருப்பின் சிறு காப்பியத் தகுதியையே அக்காப்பியம் பெறும். கனகவி ராயரின் இக் காப்பியம் **பெருங்காப்பியத்** தகுதியுடையதாகும். இக் காப்பியத்தின் அடிநாதமாக இயங்குவது இசுலாத்தின் கொள்கைகளாகும். அக் கொள்கையிலேயே இந்நாற்பொரு ளும் அடங்கி விடுகின்றது. நபிகள் நாயகம் போதித்ததும் வாழ்ந்ததும் அற[illegible]தை வலியுறுத்தியே ஆகும். அவருக்குப் பின் வந்த கலீபாக்களு[illegible], அசன் உசைனார்களும் அறன் செய்து தம் குடிகளைப் பேணினர் என்பதை இக் காப்பியத்தில் பல இடங் களில் எடுத்து மொழிகின்றார் கவிராயர்.

உமறு (ரலி) அவர்களின் அரசாட்சி அற நெறிப்பட்டது என்பதை,

**சேன முங்கிளி யும்மொரு பஞ்சரஞ் சேர**
**மானும் வெம்புலி யும்மொரு துறையில்வா ருண்ண**
**வீன வெம்பகை யறுநெறி நடத்துமெங் கோனுக்**
**கூன மாம்பகை யாவரென் றுன்னுவார் தேரார்** (791)

எனும் பாடலில் காட்டுகின்றார் கவிராயர்.

அலியார், மக்களின் பஞ்சத்தைப் போக்கியதைக் கூறும் போதும்

**செம்மைகொ டானியச் சீர்க்களஞ்சியந்**
**தம்மையே திறந்திவர் பசித ணிக்குதும்** (1070)

என்றும்,

**இரவலர் துறவல ரில்ல றத்தினோர்**
**புரவலர் மறைஞர் கணாளும் போர்த் தொழிற்**
**குரியவர் வனிதைய ருற்ற யாருமே**
**தருநிக ரலிகர தானம் வாங்கினார்** (1072)

என்றும் அவர் தம் கொடைச் சிறப்பினைக் காட்டுகின்றார் புலவர்.

கலீபாக்கள் நால்வரும் அசன் உசைனாரும் அறவழி நின்று அரசாட்சியைச் செலுத்தினர் என்பது காப்பியம் முழுக்கப் பகரப்படும் செய்தியாகும். திறைபெறுதல், பைத்துல் மால்

எனும் அரசுப் பண்டாரப் பொருள் மக்கள் நலனுக்காகச் செலவிடப் படுதல், போர்க்காரணங்கள், தூது, தீய அமைச்சால் தீமை விளைதல் முதலான அரசியல் செய்திகள், 'பொருள்' பற்றியனவாகும்.

இசுலாம் இல்லறத்தை வலியுறுத்துகிறது. இல்லற இன்பத்தின்பாற் படுகின்ற உசைனாரின் திருமணம் ஆகியவை கவிராயரால் விரிவாகப் பாடப்படுகின்றன.

**மறைவல ருசைனார் சென்றார் மங்கைமு ளவண் மகிழ்ந்து**
**நறைமலர் மாலை தன்னைச் சூட்டின ணகப் புயத்தே (701)**

என்றும்,

**மயிலை நேர்சகர் வானொடு மாண்புறு முசைனு**
**மியல்கொ ளன்றிலின் பேடுட னாணென விளிய**
**நயமன் போகமே துய்த்தன ராகவின் ணகமும்**
**வியனு லாந்தசை போலவு மிகமகிழ்ந் திருந்தார் (761)**

என்றும் கனகவிராயர் பாடியிருப்பது இக்காப்பியத்தில் இன்பம் பற்றிய பொருட் கூறு அமைந்துள்ளதைக் காட்டுகின்றது.

வீடு பேறு பற்றிக் காப்பிய இறுதியில் உரைக்காமல் கதையோட்டத்திலேயே ஆங்காங்கே சுட்டிச் செல்கிறார். சுவர்க்கம், நரகம் பற்றிய எண்ணம் இசுலாமியத் தத்துவம் சார்ந்து விளக்கப்பட்டுள்ளது. நபிகள் நாயகம் நோய் வாய்ப்பட்டிருந்த இறுதிக் காலத்தில் அவர்கள் கூறிய கூற்று மறுவுலக வாழ்க்கையைக் குறிப்பால் உணர்த்துவதாக அமைகிறது.

**பாரினிற் செய்த குற்றம் பாரிலியாந் தீர்க்க வேண்டும்**
**நேரினில் வருக வென்றே நிகழ்த்தவொக் காசெ ழுந்து**
**(228)**

நாயகம் இவ்வுலகு நீத்து, ''அமரர் கண் மூவரிறங்கியே யணியணியாய் நின்றவர்களுந் தொழுது துஆவிரந்தோதி அமரலோகடைந்தனர்''.

அபூ பக்கர் (ரலி)இவ்வுலகு நீத்துச் சொர்க்கம் புகுந்ததனை ''பேர் பெருகி வளரபூ பக்கரரும் பெறற் சொர்க்கம் பெற்றஞான்றே'' என்று குறிப்பிடுகின்றார் கவிராயர். அலியார், 'சற்றுந் துயர் கொள்ளா தடைமினென்றார் சார்ந்தார் சுவர்க்கத்தை' (1396).

உசைனார் மடிந்த போது வானவர் இறைக்கட்டளையால் கறுபலாவில் இறங்கினர். இதனை,

**தந்தையன்னையி லாதிருந்திடு தனியனேவிட வானவர்**
**வந்திறங்கினர் கறுபலாவயி னௌ்ளிடற்கிட மின்றியே**
**பந்தியாவொளி சுவனநாடுறு பரமதானி விரித்தன**
**ரெந்தையாருசை னுடலையேந்துபு வதனில் வைத்தன**
**ரிட்டமாய் (2067)**

என்று கனகவிராயர் குறிப்பிடுகின்றார்.

இவ்வாறு வீடுபேறு பற்றிப் பலயிடங்களிலும் பேசுகிறது இக்காப்பியம். எனவே பெருங்காப்பியக் கூறுகள் அனைத்தும் பெற்றது இவ்வினிய காப்பியம் எனத் தேறலாம்.

## தன்னிகரில்லாத காப்பியத் தலைவன்

தமிழ்க் காப்பிய மரபில் முக்கியக் கூறாக அமைவது, தன்னிகரில்லாக் காப்பியத் தலைவன் படைக்கப்படல் வேண்டுமென்பதாகும். பல காப்பியங்களிலும் இறையம்சம் கொண்ட தலைவன் அல்லது இறைவன் காப்பியத் தலைவனாக அமைகின்றான். கனகாபிஷேக மாலையின் காப்பிய நோக்குப்படி இமாம் உசைனார் தான் காப்பியத் தலைவர். ஆனால் ஒரு காலக் கட்டத்தின் வரலாற்றை உட்கொண்ட இக்காப்பியத்தின் பன்முக நோக்கால் பல தலைவர்கள் உள்ளது போன்ற தோற்றம் ஏற்பட்டு விடுகிறது. நபிகள் நாயகம் தொடங்கி செயினுலாபிதீன் வரையான தலைவர்களைப் பற்றிப் பேசுகிறது இக்காப்பியம். உமறு (ரலி), அலி (ரலி) ஆகியோரின் வீரச் சிறப்பு விரிவாகப் பேசப்படுகிறது. அலியாரின் கொடைச் சிறப்பு ஆகியனவும் சிறப்பிக்கப்படுகின்றன. அசனார், உசைனாரின் வீரச் சிறப்புக்களும், தனித்தெடுத்தோதும் வகையில் விளக்கப்படவில்லை. எல்லா அரசர்களுக்கும் பொதுவான முக்கியத்துவமே கொடுக்கப்பட்டுள்ளமையை இக்காப்பியத்தில் காண்கிறோம்.

பெருமானார் நபிகள் நாயகத்தை,

**தருவுறை சீன மீழம் ஷாமிலோர் பாகநாடுந்**
**திருவுறை நனிகூ பாவுஞ் செமிரிகா வபசிநாடு**
**மருவுறை காகா ஐங்கும் வார்குறா சானிநாடு**
**மருமறை மிசுறு மற்று மடங்கவோர் குடையிற்**
**கொண்டார் (117)**

*என்றும், அபூபக்கர் (ரலி) அவர்களை,*

**மண்ணெ லாமதி செழுமையோ டறங்களும் வளர**
**வெண்ணிலாவிற் சூல்நபி யருளற மெய்தி**
**யண்ண லாரபூ பக்கர்மா மதினமே லரசாய்**
**நண்ணு பாரெலாம் புரந்தினி திருக்குமந் நாளில் (308)**

*என்றும், உமறுகத்தாபு (ரலி) அவர்களை,*

**விரவுகடற் புவியிடத்தி லுமறுகுடை**
**நிழலடையு மிக்கோ ரெல்லாம்**
**வருவிருந்து தனைக்காப்பர் செல்விருந்து**
**தனையோம்பி வகுக்கு மேலாந்**
**திருவடைந்து நாளுமகிழ் குடிகொள்ள**
**விறைவனருட் டின் சிறப்ப**
**வொருநிகரு மிந்நாட்டுக் கில்லையென**
**வுமறரசாண் டுற்ற காலை (377)**

*என்றும், உதுமான் (ரலி) அவர்களை,*

**பழுதறு மிறைவன் வானப் பலகைண் டரியவேத**
**மெழுதிய நல்லோர் வாசக் குங்கும வெழில்கொடாரார்**
**வழுவறு முதுமான் வேந்தர் வயங்கரி யணையின் மேவி**
**யொழுகுநன் னெறியினாலே உலகினைப் புரக்குநாளில் (882)**

*என்றும், அலியாரவர்களை எதிரி மன்னனான சேருவான் கூற்றாகப் புகழும்போது,*

**அலியென் றெளிதி னுரைத் தீரிவ்**
**வகில மதனி லொருவன் மிகும்**
**வலியு ளானேற் புன்புல்லும்**
**வாளன் றோவன் னவர்க்குப்பே**
**ரலியென் றிருக்கிற் குறையெவனோ**
**வதிசூழ்ச் சியொடும் பகைவர்களை**
**நலிவித் திணையில் வென்றிநலத்**
**தொடுமிங் கணைமின் சென்மினென்றான் (424)**

*என்றும், அசனாரைப் புகழும்போது,*

**அலிமக ரசனார் தீனை யழித்தவன் மாபி யாவின்**
**வலிதனை யடக்கி வந்தா ரென்றசொல் வையமெங்கு**
**நலிவின்று பரம்ப வெல்லா நகரர சர்களும் வந்து**
**வலியவே வணங்கத் தங்க டிறையெலாம் வழங்கிப் போவார்**
**(1444)**

என்றும், உசைனாரைப் புகழும்போது,

**விறல்கொ ளரியே றெனவிருந்தார்**
**விண்ணோர்க் கரச ரேவல்செயு**
**மறவா ழியனா ருசைனார்..... (1905)**

என்றும், கனகவிராயர் சுட்டிச் செல்வதிலிருந்து இது தெளிவாகும். தன்னிகரில்லாத் தலைவன் ஒருவனை ஏன் படைத்திலர் எனின், அது இசுலாமியக் கொள்கைக்கு மாறானது என்பதாலிருக்கலாம். இசுலாமியக் கொள்கைப்படி தன்னிகரில்லாத தலைவன் இறைவனாகிய அல்லா ஒருவனேயாகும். எனவே இறையன்பர்களைக் கதைத் தலைவர்களாகக் காட்டும் இக் காப்பியத்தில் தன்னிகரில்லாத் தன்மையை அவர்கள் மீது ஏற்றிக் காட்டுவதைக் காணமுடியவில்லை. இது தமிழ்க் காப்பிய மரபில் ஒரு புதுமையாகவே அமைகிறது.

## அக வாழ்வு

நன்மணம் புணர்தல், புனல் விளையாட்டு, சிறுவர்ப் பெறுதல் ஆகியவை 'அக வாழ்வு' எனும் காப்பிய உறுப்பில் அடங்குகின்றன. உசைனாருக்கும் நவசேருவானின் மகள் சகருவானுக்கும் திருமணம் நிகழ்ந்தது இக் காப்பியத்தில் மிக விரிவாகப் பாடப்பட்டுள்ளது.

வேறு எந்த இசுலாமியக் காப்பியத்திலுமில்லாத ஓரமைப்பாகச் சகருவானின் சுயம்வரம் கனகாபிஷேக மாலையில் அமைகிறது. பல நாட்டு வேந்தர்களையும் விறல் வீரர்களையும் மணக்க மறுத்த சகருவான் அலி புதல்வர் உசைனாரைக் கண்டு மாலையிட்டாள் (701).

'உசைனாருக்கு மணம் புரி படலத்தில்' மண ஊர்வலம் (741) இசைக் கருவிகள் இசைத்தல் (745) உசைனார் வந்தபோது சுந்தர முகமும் தோளும் துலங்கிடக் கண்ட மாதரின் மனநிலை, பேதையர் முதலான எழு பருவநிலைப் பெண்கள், உசைனாரைப் போற்றிக் காதற் கடலில் தாழ்ந்து கரையேறாது தவித்த காட்சி ஆகியனவெல்லாம் விரிவாகப் பாடப்பட்டுள்ளன.

**மயிலை நேர்சகர் வானொடு மாண்புறு முசைனு**
**மியல்கொ ளன்றிலின் பேடுட னாணென வினிய**
**நயமன் போகமே துய்த்தன ராகவன் ணகமும்**
**வியனு லாந்தசை போலவு மிகமகிழ்ந் திருந்தார் (761)**

என்ற பாடலில் உசைனாரும் சகருவானும் ஒன்றிய இல்லற இன்பம் துய்த்தமை குறிப்பிடப்படுகின்றது.

புதல்வரைப் பெறுதல் எனும் காப்பியக் கூறுக்கேற்ப, புதல்வர் பிறக்கும் நிகழ்ச்சி ஆகியன கனகாபிஷேக மாலையில் பாடப்படவில்லை. ஆனால் அரசர் போர் நிகழ்த்தும்போது புதல்வர்கள் வீரம் காட்டுதலும், அரசுரிமை பெற்று அறம் செய்தலும் இக்காப்பியத்தில் காட்டப்படுகின்றன.

## புற வாழ்வு

மந்திரம், தூது, இகல், செலவு, வென்றி ஆகியன காப்பியங்களில் அமைய வேண்டுமென்பது மரபு. இது 'புறவாழ்வு' எனப்பட்டது. அமைச்சின் வழி அறிவுரைகள் பெறுதல் கலீபாக்கள் ஆட்சி நிலையில் சுட்டப்படவில்லை (உதுமானைத் தவிர). ஆனால் பன்னாட்டு அரசர்களும் சேர்ந்து சில நன் முடிவுகளை எடுப்பதைப் பல பாடல்களில் காணலாம். ஆனால் எதிர்மைப் பண்புடைய பாத்திரமாகிய மாவியாவுக்கும் அவர் மகன் எசீதுக்கும் தீய குணமே குடிகொண்ட 'மறுவான்' என்போன் அமைச்சனாயிருந்து பல தீயவழிகளையும் தம்மரசர்க்குக் கூறித் தீயவழியில் நடப்பித்தான். இம்மறுவான் தான் உதுமான் (ரலி) அவர்களின் அமைச்சனாகவும் இருந்து அவரது அழிவுக்கு வழி வகுக்கின்றான்.

**மந்திரி மறுவான் வேறு மனத்தனா யுதுமா னோது**
**மந்தவா றாக வொன்று வரைந்தன னணிகொள் ஷாமி**
**லந்தமாங் குடிக ளுக்கு வேறொரு கடித மாகுந்**
**தந்திர முடனே தீட்டி னான்...... (950)**

என்று இதனைக் கனகவிராயர் பாடியுள்ளார்.

அலியார் மரித்தபோது மதீனத்துக்கு உரிமை கொண்டாடிய மாவியா, தூதனுப்பி, அரசைத் தனக்கு ஒப்பிக்குமாறு கேட்பது முதலான தூது நிகழ்ச்சிகளும் இக்காப்பியத்தில் இடம் பெறுகின்றன. மாவியாவிடம் இறைசெலுத்தக் கேட்டு ஓலையெழுதி அசனார் அனுப்பிய தூது ஆகியவற்றையும் குறிப்பிடலாம்.

நாடுகள் சுற்றிவரல், போர்புரிதல், வெற்றி பெறுதல் ஆகிய செயற்பாடுகளும் காப்பியப் போக்கில் ஆங்காங்கே இடம் பெறுகின்றன. வயப்புலி அலி, அலி புதல்வர் அசனார், உசைனார் ஆகியோர் போர்களில் பெற்ற வெற்றி மிக விரிவாகக் கனகவிராயரால் பாடப்பட்டுள்ளது. அலி புதல்வர்

கள் வஞ்சிக்கப்பட்டுக் கொலை செய்யப்பட்டனர். போரில் இவர்கள் சிறந்த வெற்றியினைப் பெற்றனர். இறை நேயரான சராயீலின் அடிமையாயிருந்த தோகாந்துருக்கி எனும் திறல் வீரனின் வீரச் செயல்கள் விரிவாகப் பாடப்பட்டுள்ளதைக் காணுகிறோம்.

**கண்டன ரெசிதின் சேனைக ளெல்லாங்**
**கவினுறுந் துறுக்கியின் வீரங்**
**கொண்டனர் மனத்தின் மிகுந்திடு பயத்தைக்**
**குவலயத் துள்ளவ ரிகழ**
**விண்டல மகிழப் புறங்கொடுத் தோடி**
**விட்டன ரவ்விடை நீங்கி....** **(2498)**

என்றெல்லாம் கனகவிராயர் தோகாந்துருக்கியின் வெற்றிச் சிறப்புக்களைப் பாடுகின்றார்.

## புற அமைப்பு

இக் காப்பியத்தில் புற அமைப்புக்கள் செவ்வனே அமைந்துள்ளன. மொத்தம் முப்பத்தைந்து படலங்களில் ஒரு காலக் கூட்ட வரலாறு நுவலப்படுகிறது. இவ்வரலாற்றில் நான்கு தலைமுறையின் வாழ்க்கைச் சிக்கல் பின்னப்படுகின்றது. நிகழ்ச்சிகள் ஒன்றன்பின் ஒன்றாக அடுக்கப்படுவதால் காப்பியப் போக்கில் சிக்கலில்லை. சிலபோது, களமாற்றத்திற்காக, 'இது நிற்க' (198) 'ஈது நிற்க' (1650) என்று கூறி மற்றோரிடத்து நிகழ்ச்சியைக் கூறும் உத்தியைக் கையாண்டிருக்கிறார்.

முற்கூறியது போல நான்காவது படலமாகப் 'பதிகப் படலம்' அமைக்கப்பட்டுள்ளது. பதிக அமைப்பில் இது ஒரு புதுமையாகும். படலங்கள் எல்லாம் அவ்வக்காரணங்களாலே பெயர் பெறுகின்றன. 'முதன் முறைப் படலம்' 'அபுபக்கரரசுரிமைப் படலம்', 'உதுமானார் வதைப்படலம்' என்று அப் படலத்தின் பாடுபொருளுக்கேற்பப் பெயர் பெறுகின்றன.

ஒவ்வொரு படலமும் முன்னைய, அடுத்த பதிகங்களோடு தொடர்பு படுத்தப்படுகின்றன. ஒரு படலம் முடியும் போது அடுத்த படலத்தின் பொருளைச் சுட்டிக் கூறும் மரபைப் பின்பற்றியுள்ளார். உதுமானார் வதைப் படலத்தின் இறுதிப் பாட்டு இவ்வாறமைகிறது.

**துன்பக் கடலிற் பரதவித்தோ ரின்பத் துறையங் கரைசேர்ந்தாங்**
**கின்பந்திருவா சிங்குலத்தோ ரெய்தியிருக்க மிசுறரச**

**ரன்பங் கெய்தி யலிப்புலியார்க் கரசாங் களித்த சரிதைதனை**
**முன்பிங் கியற்றும் பவமொழிய முதலோனருளே**
**பெறமொழிவாம் (1021)**

இதனுடைய தொடராக அடுத்த படலமான அலியாரரசுப் படலம் அமைகிறது.

உமறு கத்தாபு அரசுநிலைப் படல இறுதிப் பாட்டில் அரசன் முன் சென்று தம்படை முறிந்தது கூறும் கூற்று நிகழ் கிறது (மந்திரி தனையுங் கொன்றான் வாளினம் படைமுறிந்த 452). அடுத்த படலமான 'நவசேருவான் வதைப்படலம்', ''அங்கவருரைத்த மொழி கேட்டரசர் கோமான்'', எனத் தொடங்குகின்றது. இவை போன்ற புற அமைப்பைக் கனகவி ராயர் படல அமைப்பில் பின்பற்றியிருக்கின்றார். காண்டம், சருக்கம் எனும் பகுப்புகள் பின்பற்றப்படவில்லை.

## அக அமைப்பு

ஒரு காப்பியத்தில் அல்லது நாடகத்தில் காப்பியச் சுவையை மிகுவிப்பதற்காகப் பின்பற்றப்படும் அமைப்பை அக அமைப்பு என்பர். இதனைச் சந்தி அமைப்பு என்றும் குறிப்பிடுவர். காப்பியக் கட்டுக்கோப்பைத் தழுவி அமைவதே இச் சந்தியமைப்பு. பொதுவாக நாடகத்தின் தொடக்கம், திருப்புமையம் அல்லது சிக்கல், உச்சக்கட்டம், வீழ்ச்சி, முடிவு எனும் அக அமைப்புக்கள் அமைந்து நாடகச் சுவையை மிகுவிப்பது போலக் காப்பியத்திலும் அமையலாம். இவ்வாறான அக அமைப்பு ஆற்றொழுக்காகச் செல்லும் கதைப் போக்கில் சில திருப்பங் களைத் தோற்றுவித்துக் கற்போருக்கு இலக்கிய இன்பந்தருவ தாகும்.

கனகாபிஷேக மாலை தொடங்குவது கடவுள் வாழ்த்து, நாட்டு, நகரப் படலங்களாலாயினும் கதையின் தொடக்க மானது நபிபெருமான் இறையின் தூதரான வானவர் ஜிபுறயேலுடன் உரையாடுகின்றதிலிருந்து ஆரம்பமாகின்றது. பெருமானாரின் பேரர்களுக்கு எதிர்காலத்தில் நிகழப்போவதை அவர் கூறியபோது ஒரு மறைநிலை (Suspence) கதையில் தோன்றுகிறது.

**......பேரர்தம்பா**
**லாறா வினைவந் தடைவதுநீர் கேளுமென்றார் (142)**

**நீடாழிப் பாரினெறி நடத்தி மிக்கபல**
**நாடாளு நாளிலச னஞ்சா லிறப்பரென்றார் (143)**

**. . . . யுசைனார்**
**சேனந் தொடர்வேலார் செம்பட் டெடுத்ததினாற்**
**கானந் தனிலே கருவியான் மாய்வரென்றார் (144)**

**என்ன மிகுந்துசைனா ரெங்கிறப்ப ரென்றிறசூல்**
**விண்ணவரைக் கேட்க விண்ணவர்கோ னந்நபியே**
**கண்ணகன்ஞா லத்திற் கறுபலா வெனுந்தலத்தம்**
**மண்ணிதென வேகொடுத்து வையுமொரு குப்பிதனில்**
**(151)**

**ஊழி தொடர்தே யுசைனிறக்குங் காலத்தில்**
**பூழி குருதிநிறம் போல்வதடை யாளமென்றார் (152)**

இவ்வாறு தொடங்கும் இக் காப்பியக் கதை, பெருமானார் அவரது தோழராம் மாவியாவுடன் உரையாடும்போது இயக்கம் பெறுகிறது.

**என்மக ளுதவு பாலர்க் கிவண்பகை ஞர்கள்வே றில்லை**
**நின்மகன் றானென் றோத நெடுநிலத் தறைந்து வீழ்ந்து**
**(168)**

அரற்றினார் மாவியா. இதனால் மண முடிக்காதிருந்து தேள் கொட்டியவிடம் நீங்கக் கிழவியை மணந்து புணர்ந்து எசீது என்பவனைப் பெற்றார். கதையின் எதிர்ப்பண்புடைய பாத்திரத்தின் தோற்றமும் கூறப்பட்டது. அதன் பின் அவன் எதிர்காலத்துணையாகப் பேசும் மறுவான் எனுந்தீயோன், அபூபக்கரின் மகன் 'சபா' வெனும் இளைஞர்களுடன் விளையாடிக் கொண்டிருக்கும்போது ஆடை பற்றியிழுத்துப் பூசலிட்டான். பின்னர் 'சபா' தான் பூசல் செய்தாரெனப் பொய் புகன்றான். நபியவர்கள் விசாரித்தபோது உண்மை தெரிந்தது. நபி பெருமான் அவனை முடி களைந்து இனி மதீனத்தில் சேர்க்க வேண்டாமென இறை நேயர்களுக்குச் செப்பினார். இவ்வாறு இரு எதிர்ப் பண்புடைய பாத்திரங்களையும் அவரால் விளையப் போகும் தீங்கினையும், முன்னரே அறிமுகப் படுத்தி விடுகிறார். எனவே இக் காப்பியத் தொடக்கமே கற்பவர்களை ஓர் எதிர்பார்ப்பில் இருத்தித் தொடர்ந்து படிக்கத் தூண்டுகின்றது.

இக் காப்பியத்தில் சிக்கல் என்பது சிறிது சிறிதாக வளர்த்துச் செல்லப்படுகிறது. நன்னபியின் பின்னர் அபூபக்கர்

(ரலி) பதவியேற்றார். அபூபக்கர் (ரலி) பிணிவாய்ப்பட்டு இறந்த பின்னர் உமறுக்கத்தாப் (ரலி)யைத் தலைமைப் படுத்தினர். நல்லாட்சி புரிந்தார் அவர். நவசேருவான் தோற்று மடிந்த பின்னர் அவனது பெண் மக்களான சகருவான், நாசுநூசு என்பவரின் திருமணத்தில் கதைச் சிக்கல் வலுப் பெறுகிறது. சகருவான் எசீது முதலானோரை ஒதுக்கி உசைனாருக்கு மாலையிட்டாள். எசீது மனக்கர்வங் கொண்டான். உமறுகத்தாப்பின் மறைவுக்குப் பின் யார் அரசராவது என்பதில் போட்டியேற்பட்டது. சாம் நாட்டை ஆளும் மாவியா சூழ்ச்சி செய்து தமது உமையா கோத்திரத்தாருக்கு அப் பதவியைக் கொடுத்திடத் திட்டங்கள் தீட்டினார். அலியாரின் இடையீட்டால் அப்பதவி நபித் தோழரான உதுமானாருக்குச் சென்றது. மாவியா அலியாரின் எதிரியானார். கதைச் சிக்கல் மேலும் வலுப் பெறுகின்றது. உதுமானாரும், அலியாரும், அசனாரும் கொல்லப்படும்போது கதைச் சிக்கல் முழுமை பெற்றுத் திருப்புமையமாகிறது.

இக் காப்பியத்தில் உசைனாரின் படுகொலை உச்சக் கட்டமாக அமைகிறது.

**உசையினார் சிரங்கொய்ய வுவந்த பாதக**
**னிசைபெறு முசைனது சிரங்கொண் டேகின**
**னசையொடு மதுகண்டு நலிவுற் றாங்குறு**
**திசைபுக ழலிமகர் சீர்த்த வாசியே (2033)**

**வானுல குயர்ந்தோர் வந்து மன்னவ ருசைனா ருக்குக்**
**கானிடை யிழவுகொண்டா டியகதை நவின்றாம்... (2086)**

எனும் பகுதிகள் இக் காப்பியக் கதை உச்சக் கட்டத்தை அடைந்ததை விளக்குகின்றன.

சறாயீல் எனும் இறையன்பர் உதவியால் எசீதின் படைகள் தோற்கடிக்கப்பட்டன. சகுதியின் உதவியால் உசைனாரின் தலை மீட்கப்பட்டு உடல் நல்லடக்கம் செய்யப்பட்டது. இந்நிகழ்ச்சிகள் கதையின் முடிவை நோக்கிய வீழ்ச்சியாக அமைந்துள்ளன.

அப்துல்லா சையாது, எசீது, மறுவான் ஆகிய எதிரிகளின் மடிவால் கதை வீழ்ச்சி விரைவு பெறுகிறது. மறுவான் வதையின் பின் இறையன்பர்கள் கூடி அசனாரின் மகனான செய்னுலாபிதீனுக்கு அரசுப் பட்டம் சூட்டியதோடு காப்பியக் கதை 'முடிவு' அடைகிறது. இக் கூறுகள் ஒன்றன்பின் ஒன்றாக அமைந்து காப்பியச் சுவையை மிகுவிக்கின்றன.

## சுவையும், மெய்ப்பாடும்

காப்பியம் சிறப்படைய அதில் அமைந்துள்ள 'சுவை' முக்கிய காரணமாயமைகிறது. காப்பிய மாந்தர்களின் மெய்ப்பாடு வழியும், உள்ளோட்டமாக அமைந்துள்ள சுவையின் வழியும் இஃது வெளிப்பட்டு நிற்கிறது. எண்வகை மெய்ப்பாடுகளும் காப்பியங்களில் இடம் பெறலுண்டு.

**நகையே அழுகை இளிவரல் மருட்கை**
**அச்சம் பெருமிதம் வெகுளி உவகையென்று**
**அப்பா லெட்டாம் மெய்ப்பா டென்பர்**

(பொருள். 248)

எனத் தொல்காப்பியம் மெய்ப்பாட்டை வகைப்படுத்துகிறது.

அவலக் காப்பியங்களில் அவலச் சுவை மிக்கு நிற்கக் காணலாம். தலைமைப் பாத்திரங்கள் துன்பத்துக்கு உள்ளாகி அவலம் பெறுதலால் இச்சுவை இக்காப்பியத்தில் மிக்கு நிற்கிறது.

உசைனாரின் வரலாறையும், கறுபலாவில் அவர் படுகொலை செய்யப்பட்ட கொடுமையினையும் பாடுவதே கனகாபிஷேக மாலையின் நோக்கமாயிருக்கிறது. உசைனார் கொலை செய்யப்பட்டதோடு கதை முடிவுறாமல் எதிர்ப்பண்பினர் அழிக்கப் படுதல், அசனாரின் மகனான செயினுலாபிதீன் அரசுப் பதவி யேற்றல் என்று இன்பியல் காப்பியம் போல முடிவுறுகிறது. ஆனாலும் இக்காப்பியத்தின் உள்ளோட்டமாக அமைந்துள்ளது துன்பியல் உணர்வாகும். பெருமானார் அவர்களின் மறைவு தொடங்கிக் கலீபாக்களின் மறைவு, உதுமானார் அலியார், அசனார், ஆகியோரின் படுகொலைகள், கறுபலாவில் நிகழ்ந்த உசைனாரின் படுகொலை அவர் தம் உற்றார் பெற்ற துன்பங்கள் ஆகியன ஒரு துன்பியல் காப்பியத்தின் சுவையினையே கற்போருக்குத் தருகின்றன. 'பிற சுவை'களும் கதைப் போக்கில் ஆங்காங்கே உணர்த்தப்படுகின்றன.

### அழுகை

இக்காப்பியத்தில் அழுகை எனும் மெய்ப்பாடு பல பாடல் களின் வழி வெளிப்படக் காண்கிறோம். 'அழுகை'யை 'இழிவே இழவே, அசைவே, வறுமை', எனும் நான்காகப் பகுப்பர் தொல்காப்பியர் (பொருள் 249). பெருமானார் நபிகள் நாயகம்

உயிர் நீத்தபோது நபி பிராட்டியார் புலம்பியதனைக் கூறும் கனகவிராயர்,

**பதறினர் நிலத்து வீழ்ந்தார் பூழிசே ரளக மானார்**
**கதறின ரானார் கண்ணீர்ப் பருநதி யெனவி டுத்தா**
**ருதறின ருடன்ம யங்கி யுற்றனர் கலன்க ளெல்லாஞ்**
**சிதறினர் மயிலே யன்ன திருநபி பிராட்டி மாரே (262)**

**வானிரங்க வானோர் மதிபா னுடுவிரங்க**
**வானிரங்க வாரி யயர்ந்திரங்கத் தீவிரங்கக்**
**கானிரங்கப் பூமி கரைந்திரங்கப் போதிரங்கத்**
**தீனிரங்க யாவுந் திகைத்திரங்கி யேயழுத (264)**

என்று பாடியுள்ளார்.

நவசேருவானுடன் உமறுகத்தாபு போர் புரிந்தார். அப்போரில் பல வீரர் மடிந்தனர். உமறு சேருவானின் நகருள் புகுந்தார். அப்போது அம் மக்களின் வருத்த நிலையை,

**மைந்தர் வந்தில ரெனப்பலர் வருந்துவர் மதிகூர்**
**தந்தை வந்தில ரெனப்பலர் மெலிகுவர் தமைய**
**ரிந்த நாழிகை யளவுமிங் கணைகில ரென்னே**
**சிந்தை யங்கவர்க் குறுவன வெனச்சிலர் மொழிவார்**
**(517)**

என்று கவிராயர் காட்சியாக்குகிறார்.

உமறுகத்தாபு குத்தப்பட்டுக் குடல் சரிந்து கிடக்கும் காட்சியை அவலச்சுவை மிக்க முறையில் பாடியுள்ளார்.

**பாங்கு கூறினர் கேட்டனர தையும றரச**
**ராங்கு செல்லுவா னெழுந்தனர் தைத்தநு லற்றுத்**
**தாங்கு நீள்குடற் சரிந்தது சொரிந்தது சோரி (809)**

உதுமானார் வதைப்படலத்திலும் துன்பியல் காட்சியொன்றைக் காட்சிப்படுத்துகிறார் கவிராயர்.

**மாதர் சிலபேர் வயிறலைத்தார் வருந்திக் குயின்முன்**
**குயிலேபோ**
**லோதி யவிழத் தரைவிழுந்தா ருருண்டார் புரண்டா**
**ருடலமெலாம்**
**பூதி படியக் கலன்களெலாம் பொடியப் புறத்திற் சிதறிவிழ**
**வாதி விதித்த விதியிதுவோ வந்ததோ வென்றா**
**ரழுதார்கள் (1010)**

இது போன்ற அவலக் காட்சிகள் பல இக்காப்பியத்தில் மெய்ப் பாட்டுணர்வுடன் காட்டப்பட்டிருப்பினும் கறுபலாவில் உசைனாரின் குடும்பத்தாரைச் சுற்றி எசீதின் படைகள் வளைத்துக் கொண்டபோது நிகழ்ந்த நிகழ்ச்சிகள் கற்போர் மனதைக் கரைக்கக் கூடியனவாகப் படைக்கப்பட்டுள்ளன. உசைனாரின் மனைவி சகருவான் தனது பச்சிளம் பாலகனுக்கு தாகந்தணிக்க நீரில்லாது வருந்திய அக்காட்சியைப் புலவர் இவ்வாறு புகல்கின்றார்:

**நவைசெயுந் தவனந்தீர நவிலுமம் மதலைக் குத்தங்**
**கவின்முலை யுண்ண வந்தார் கழறுமக்குழவி யுண்ணச்**
**சுவைதரு மமுதமி யாதுஞ் சுரந்திலை கடவு ளேயிந்**
**நவமவண் புரிய வெண்ணில் நல்குமோ வமிர்தங்**
**கொங்கை (1851)**

**சுவையுறும் பால்வ ராதாற் சுதனன்னை முகத்தை நோக்கி**
**நவையொடு மழுங்க வம்மை நல்லுசைன் முகத்தை நோக்கி**
**தவறினைக் குறிப்பிற்காட்டித் தரளம்போல் விழிநீர் சிந்த**
**வவையுணர்ந் துசைனா ருள்ளத் தடக்கொணாத்**
**துயரங்கொண்டார் (1852)**

**கணங்கொளா விறைவர் போற்றும் கான்முளை தனைமை**
**யுண்ணுங்**
**கணங்கெழா வாரு நீராற் கவலபி ஷேகஞ் செய்தார் (1853)**

இது போன்று இம்மெய்ப்பாட்டின் ஆழமான உணர்வு களைக் கவிராயர் காப்பியம் முழுக்கப் பரவலாக உட்படுத்தி யிருக்கின்றார். அவலக் காப்பியத் தகுதியை இது போன்ற காட்சி நிலைகள் இக்காப்பியத்துக்கு அளிக்கின்றன எனில் மிகையன்று.

**நகை**

இக்காப்பியத்தில் நகையெனும் சுவையும் உட்படுத்தப் பட்டுள்ளது. நகையெனும் மெய்ப்பாட்டில் 'எள்ளல், இளமை, பேதைமை, மடனென்ற நான்கையும் அடக்குவர் (தொல். பொருள். 248). ஜங்கி எனும் நாய் முலையன் உசைனாரின் தலையை வெட்டிக் 'கள்' மயக்கத்தில் சகுதி எனும் நல்லோ ரிடம் கொடுத்து மறுநாள் வாங்கச் சென்றான். சகுதி உசைனாரின் தலைக்குப் பதிலாகத் தம் மக்களின் தலையைக் கொடுத்தனுப்ப முயற்சித்தார். இறுதியில் ஏழாவது மகனின் தலையையே அவன் ஏற்றுக் கொண்டான். இக்காட்சி

அவனது முட்டாள்தனத்தைக் காட்டி நகையூட்டுகிறது. (2135, 2136)

**இளிவரல்**

இம் மெய்ப்பாடு 'மூப்பு, பிணி, வருத்தம், மென்மை' ஆகிய நான்கின் பொருட்டுத் தோன்றும் (தொல். பொருள் 250). இக் காப்பியத்தில் அபு பக்கர் (ரலி) பிணியால் வருந்தியபோது இம் மெய்ப்பாடு வெளிப்படுகிறது. 'நவிலுறும் பிணியிவர்க்கு நாயகன் விடுத்தான்' (355)

**சூழ்கடற் புவியில் வாழ்நாட் டொலைந்ததென் றுளத்தி லெண்ணி**
**யாழ்கடற் கரைமீ னென்ன வரிவையின் குழங்கள் சூழத்**
**தோழர்வந் தவசமெய்தச் சொல்வலார் கனிந்து நைய**
**மாழ்கினர் வருந்திப் பின்னுந் தெளிந்தனர் சிறிது மன்னோ**
**(356)**

**மருட்கை**

இம்மெய்ப்பாடு இக்காப்பியத்தில் பலயிடங்களிலும் வெளிப்பட்டு நின்றாலும் தோகாந்துருக்கியின் அளவிடற்கரிய போர் ஆற்றலைக் கண்டு அஞ்சிய பகைவரின் வியப்பில் இவ் வுணர்வு வெளிப்படக் காண்கிறோம்.

**பார்த்தனர் வீரன் றன்னைப் பயந்தனர் பகைவ ரெல்லாம்**
**வேர்த்திட வுடல மெல்லா நம்மிலே வெகுபேர் தம்மை**
**யார்த்திட நேற்றுக் கொன்ற வரியின்றும் வந்ததே.. (2504)**

**அச்சம்**

அணங்கு, விலங்கு, கள்வர், அரசர் எனும் நால் வகை யாலும் அச்சம் எனும் மெய்ப்பாடு உருவாகும் என்கிறது தொல்காப்பியம் (பொருள் 252). கனகாபிஷேக மாலையில், அலியாரை வதைப்பதற்காக மறுவானின் உத்திப்படி எசீது, மந்திரவாதிகளின் வழி பேய்களை ஏவிவிட்டான். அப்பேய்கள் அலியாரைக் கண்டு அஞ்சின. அதனைக் கவிராயர்,

**வஞ்சகர் விடுத்த பேய்கள் வாளலி தமை நெருங்கற்**
**கஞ்சின வவரார் நீதி யறமுத லியன கண்டு**
**விஞ்சையர் தம்பான் மீண்ட வெகுண்டவர் நடுங்க வன்னார்**
**நஞ்சினை யருந்து மீன்போ லாயினர் நவிற னீத்தார் (1313)**

என்பபாடுகின்றார். இறுதியில் எசீது மனம் பேதலித்து, கொலை செய்யப்பட்ட அலியாரின் உருவம், தம்மை வெட்ட வருவது போல உணர்ந்து நடுங்கும் காட்சியும் இம்மெய்ப்பாட்டை விளக்குகிறது.

..........................கசடன் றன்னை
யொருவிடத் திருத்தி னார்கள் பின்னுமே யுடன டுங்கி
வெருவியவ் விடத்தை நீங்கி விற்ன்மிகு முசைனே யென்னை
(2727)

வீணிலேன் வெட்டு கின்றாய் வெட்டலென்று........
(2728)

என அப்பகுதியை அமைத்துக் காட்டுகின்றார்.

## பெருமிதம்

தொல்காப்பியம் பெருமிதம் எனும் மெய்ப்பாடு கல்வி, தறுகண், புகழ்மை, கொடைமையென நான்கு களன்களில் தோன்றுமென்கிறது (பொருள் 253). உமறுகத்தாபின் பைத்துல்மால் (களஞ்சியம்) குறைந்தது எதனால் எனக் குறிப்பிடும் கவிராயர்,

முன்னாளி லொருநாளும் பைத்துல்மாற்
குறைந்ததாய் மொழியு மில்லை
யிந்நாளிற் குறைந்ததிவ ரிணையில்லாக்
கொடையாலு மேழை யானோர்
இந்நாட்டி லிலையென்ன யாவருமே
புகலவரு ளினதி னாலும்
பொன்னாலு மணியாலும் பணியாலு
நிறையூரார் புகழ்ந்தோர் மன்னா (376)

என்கிறார். அலியாரது ஆட்சிக் காலத்தில் பஞ்சம் ஏற்பட்டது. அவர் களஞ்சியப் பொருள்களை மக்கட்கு ஈந்து கலி துரத்தினார். இதனை,

வயவரிப் புலியலி வழங்க வாங்கியே
நயவர சிவரென நவின்ற ருந்தினர்
கயமென வாயினர் கலிது ரத்தினர் (1073)

என்ற பாடல் விளக்குகிறது.

இக்காப்பியத்தில் உட்பொருளாக இறையன்பர்களின் தறுகண்மையும், நேராண்மையும் பரவிக் கிடக்கக் காண்கி

றோம். மடிந்த இறையன்பர்கள் வீரத்தோடு பொருது ஷகிதானார்கள் (வீர சொர்க்கம்); அல்லது வஞ்சனையால் கொல்லப்பட்டனர். இவ்வீரத் தலைவர்களின் தறுகண்மை பல பாடல்களில் பிரதிபலிக்கிறது. பாத்திமா அவர்கள் மறைந்த போது அவர்களைக் கபரடக்கினர். அக்குழியகழ வரும் மனிதரிடம் பொருதுவோமெனக் கூறினார் அலியார்,

**செல்வ ராலியுஞ் சேய்பதி னெண்மருங்**
**கல்பி னாண்மையைக் காட்டுவ மென்றனர்**
**வல்வில் வாங்கினர் வாளிதொ டுத்தனர்**
**கொல்வ மந்தக் குழியகழ்ந் தாலென்றார் (348)**

அலியாரின் வீரத்தை எதிரி மன்னன் சேருவானே புகழ்கிறான்

**அலியென் றெளிதி னுரைத் தீரிவ்**
**வகில மதனி லொருவன் மிகும்**
**வலியு ளானேற் புன்புல்லும்**
**வாளன் றோவன் னவர்க்கு (424)**

மாவியாவின் வீரர் அலியிடம் தோற்றனர். அவர்களை முன்னிறுத்தி ஆயுதமிட்டு ஓடுங்கள் என்றார் அலியார். மாவியா குறுகினர் அவர்முன் (1129) சறாயீலின் படைஞரான தோகாந் துருக்கியின் தறுகண்மை கண்டு எதிரிகள் அஞ்சினர்.

**வையக மதிக்கும் வீரனாந் தோகாந்**
**துறுக்கிமா ரியெனப்பெய் கணைகள்**
**வெய்ய காலிபுவின் மைந்தன்மார் பழுந்தி**
**வெந்நினை யுருவியே கினவால் (2485)**

இது போன்ற பல பாடல்களில் அவர் தம் வீரம் பேசப்படுகிறது.

சறாயீலில்லாத சமயத்தில் நகரைவளைத்துக் கொண்ட எதிரிப்படையுடன் பொருத பெண்களுக்குப் போருடை தரிப்பித்துப் போர் செய்து வென்ற சறாயீலின் தங்கை பாத்திமாவின் வீரம் பெண் வீராங்கனையை முன்னிறுத்துகிறது. (2409, 2410).

## வெகுளி

உறுப்பறை, குடிகோள், அலைதல், கொலைக்கு ஒருப்படல் எனும் நான்கு வெறுக்கத் தக்க செயல்களால், வெகுளி எனும் மெய்ப்பாடு உருவாகும் என்கிறது தொல்காப்பியம்

(பொருள். 254). சேருவானின் படையினர் தோற்றோடி அவனிடம் இச்செய்தி புகன்றபோது,

**எண்ணி லாப்படை கொண்டவ ணேகினோர்**
**மண்ணின் மீது மடிந்தன ரென்னலுங்**
**கண்ணி னாலழல் கால வெகுளிகொண்**
**டண்ணன் மீசை துடித்திட வாகினான் (472)**

என்று அவனது வெகுளி மெய்ப்பாட்டைப் புலவர் எடுத்துக் காட்டுகிறார்.

திமிசு மன்னரான மாவியா மதீன நகர் புகுந்து அழிவு ஏற்படுத்துகிறார் எனக் கேட்டபோது, அலியார் 'அதிசக் கோபத்தினராகி' (1076) செயல்பட்டார். மாவியாவை மதீனம் விட்டகலுமாறு தூதனுப்பினார் அலி. அதுகேட்ட மாவியா,

**விழிக ளழல விதழ்துடிக்க மீசை துடிக்க வெயிறதுக்கி,**
**யொழிவில் கோபங் காண்பித்தார்........ (1086)**

என்று அவர்தம் வெகுளி மெய்ப்பாட்டைக் கவிராயர் உரைக் கின்றார்.

தான் கண்ட கனவில் 'பூனைக் கண்ணன் தலையறுக்க எமை வந்தடைவாய் என நபிநாதர் கூறினார்' எனப் புகன்றார் உசைனார். பின்னர் கறுபலாவில் தம்மைச் சூழ்ந்துள்ள குடிகளுக்கும் துன்பமிழைக்கும் அப்துல்லா சையாதின் படைகளுடன் பொருதப் பரிமீது ஏறிய போது சகருவானும் பிறரும் அவரைத் தடுத்தனர்.

**நலருசைன் றங்கை யோர்பாற் குசையினைப் பற்றினார்நம்**
**மலைநிகர் புயத்து சைனம் மாதர்மேல் வெகுளி காட்டி**
**விலகிடும்படிக்குச் செய்தார் ... ..... (1961)**

சறாயில் மன்னர் எசீதின் படையினரைப் பற்றி அவர்தம் மூக்கினை அரிந்து அனுப்பும் காட்சியிலும் இம்மெய்ப்பாடு மிக்கு நிற்கிறது.

**அருகி னின்றிடும் வீரரை நோக்கியிவ் வசடர்**
**பரிவு கொண்டிட மூக்கினை வலதுபாற் காதைக்**
**கரமிரண்டினு ளொன்றினை யறுத்தென்கண் காண**
**விரைவி னிங்ஙனங் கொணர்மினீ ரெனவிளம்பின ரால்**
**(2246)**

முகம்மது கனிபா இசிக்கிலானகருக்கு 'வெகுளி'யோடு உழுவை போல் வந்தார் (2552) என்றும், உசைனார்சிறப்புக்குக் காரண மான அப்துல்லா சையாதை வீரர்கள் 'வலக்கை வெட்டினர், பேயர் நாவினைப் பிளந்தன ரறுத்தனர்', (2596; '2593) என்றும் அவர்தம் வெகுளி காட்டுகிறார் கவிராயர்.

## உவகை

இம்மெய்ப்பாடு, செல்வ நுகர்ச்சி, ஐம்புலன்களான் நுகர்தல், காம நுகர்ச்சி, விளையாட்டு ஆகியவற்றைக் கள மாகக் கொண்டு தோன்றுமென்கிறது தொல்காப்பியம் (பொருள். 255). நவசேருவானின் மக்களான சகருவானும், நாசுநூசும் அழகில் சிறந்திருந்தனர் என்பதைக் கூறும் புலவர்,

**மன்னும் வனப்பி னிளம்பிறையோ**
**வனப்பா ரொருசிங் துரத்திலகப்**
**பொன்னங் கணிச்சி யேகொலிவர் (569)**

என்றெல்லாம் காட்சியின்பங்காட்டுகிறார். சகருவானை மணந்தார் உசைனார். அவ்விருவரும் இன்புற்றிருத்தலை

**மயிலை நேர்சகர் வானொடு மாண்புறு முசைனு**
**மியல்கொ ளன்றிலின் பேடுட னாணென வினிய**
**நயமன் போகமே துய்த்தன ராகவண் ணகமும்**
**வியனு லாந்தசை போலவு மிகமகிழ்ந் திருந்தார் (761)**

என விளக்குகின்றார். இது போன்ற பாடல்களில் உவகை எனும் மெய்ப்பாட்டினைக் காண்கிறோம்.

சகருவானை மணக்க மன்னர் உமறுகத்தாப் விரும்பினார். அவள் சம்மதிக்கவில்லை.

**வேந்தரிம் மொழியைக் கேட்டு விசனமாங் கடலு ளாழ்ந்தா**
**ரேங்தெழின் மடவா ளென்னே யெண்ணிலள் சிறிது மென்னை**
**மாந்தரு டாதை கல்வி மான்றனை விரும்பு மேகக்**
**கூந்தலாய் பொருளி ளானைக் குறிக்குமின் வனப்பைத்**
**தேடும் (630)**

என்னும் பாடலில் அவரது கைக்கிளை நிலையினைக் காட்டு கிறார்.

உசைனாரின் அழகு கண்டு பெண்டிர் பசலை நோய் கொண் டனர். 'சுந்தர முகமுந் தோளுந் துலங்கிடக் கண்ட மாதர்

விந்தையென்றுள்முடைந்து வெள்வளை சொரிந்து' நின்றனர் (747).

**பேதையர் பெதும்பை மாதர் மங்கையர் பெரும டந்தை**
**கோதைய ரரிவை நல்லோர் தெரிவையர் குழாங்கொண் டாரும்**
**போதுறு மணஞ்செய் மாலைப் புயருசைன் றம்மைப் போற்றிக்**
**காதலங் கடலுட் டாழ்ந்து கரைபெறா ராயி னாரே (748)**

இது, தமிழ் மரபு சார்ந்து கவிஞர், காப்பியம் இயற்றியதனைக் காட்டுகின்றது. இசுலாமியக் கொள்கையில் இது தவிர்க்கப் பட்ட ஒன்றாகும். தமிழ்க் காப்பிய மரபினுக்காக இது உட்படுத்தப்பட்டதெனலாம்.

இதுபோன்றே எசீது, அப்துல்லா என்பவரின் மனைவியைக் கண்டு காமநோய் கொண்டதனையும் குறிப்பிடலாம். பிறன் மனை நயந்த கயவன் எனக் காட்டுவதற்காக இப்பகுதி இணைக்கப்பட்டிருக்கலாம். அவனது காம நோய் பற்றி

**கண்டவவ் வெசிதுப் பாவி காமமாங் கொடிய வெங்நோய்**
**கொண்டன னின்ன மாதர் குவலயத் துண்டோ வென்று**
**(1448)**

**.........மன்னுமிங் நினைவினாலே**
**வனங்கெட வுடலம் வாடி வந்தனன் றிமிசின் மீதோ (1450)**

என்று குறிப்பிடுகிறார் புலவர்.

எண்வகைச் சுவையும்படக் காப்பியம் இயற்றியுள்ளார் கனகவிராயர். ஆனாலும் இக் காப்பியத்தில் வீரச் சுவையும்' அவலச் சுவையும் மிகவும் வெளிப்பட்டமைந்துள்ளன. 'போர், நிகழ்ச்சிகளும், படுகொலை நிகழ்ச்சிகளும் அதிகமாக அமைந் திருப்பது இதற்குக் காரணமாகும்.

## மொழி நடை

ஓர் இலக்கியத்தின் இலக்கியச் சிறப்புக்கும், இனிமைக்கும் காரணமாக அமையும் முக்கிய கூறுகளில் ஒன்றாக அதில் பயின்று வரும் யாப்பு, மொழி நடை ஆகியவற்றைக் கூறலாம். சமயத் தத்துவம் சார்ந்த காப்பியங்களில் அச்சமயம் சார்ந்த கலைச்சொற்கள் பயின்று வருவது இயல்பாகும். வடசொற்கள் முதலானவை இவ்வாறு காப்பிய மொழியில் பயின்று வரக் காண்கிறோம். தமிழகத்தில் நடைபெறாத ஒரு வரலாறு

தமிழ்க் காப்பிய வடிவம் பெறும்போது அவ்வரலாறு சார்ந்த சமயத்தின், நாட்டின் மொழிக் கூறுகளை எடுத்தாள்வது இயல்பானதாகும். தமிழில் இயற்றப்பட்ட தத்துவ நூற்களில், தத்துவத்தின் மொழியெனக் கருதப்படும் சமஸ்கிருதச் சொற்கள் எடுத்தாளப்பட்டுள்ளன. நமது நாட்டில் 17-ஆம் நூற்றாண்டில் மணிப்பிரவாள மொழிநடை பயின்று வந்தமையை மொழிநூலார் குறிப்பிடுகின்றனர். அரபுத்தமிழ், அரபுமலையாளம் எனும் மொழி நடைகள் பற்றியும் அறிஞர் சில குறிப்புகளைத் தருகின்றனர். இக்கருதுகோளோடு 16-ஆம் நூற்றாண்டைச் சார்ந்த இக்காப்பிய மொழி நடையைக் கணிக்கும்போது சில உண்மைகள் வெளிப்படுகின்றன. பிற இசுலாமியக் காப்பியங்களோடு ஒப்பிடும்போது மிகக் குறைந்த அளவிலேயே தமிழல்லாத பிற சொற்களைப் பயன்படுத்தியிருக்கிறார் கனகவிராயர். அச்சொற்களை எடுத்தாளும்போதும் தமிழ்ப் புணர்ச்சி விதி முதலானவற்றை மனதில் கொண்டே கையாண்டிருக்கிறார். இதனால் காப்பியத்தின் ஆற்றொழுக்கான நடை பாதிக்கப்படாமல் காக்கப்படுகின்றது.

இக்காப்பியத்திலான 2792 பாடல்களில் சுமார் பதினைந்தாயிரம் சொற்கள் வருகின்றன. இவற்றில் ஆயிரத்துக்கும் குறைவான அரபு முதலான பிற மொழிச் சொற்களே பயின்று வருகின்றன. கிட்டத்தட்ட ஐந்து விழுக்காடு பிற மொழிச் சொற்களே இக்காப்பியத்தில் பயின்று வருகின்றன. இது கனகவிராயரின் புலவர் குடும்பப் பாரம்பரியத்தை உணர்த்துகிறது.

இக்காப்பியத்துள் வரும் சில குறிப்பிடத்தக்க அரபுச் சொற்கள் பின்வருமாறு அமைகின்றன.

றசூல்: 2; அறுஷ்: 3; அலிம்: 4; கிதாபு: 4; குபிரு: 7; பைத்துல்மால்: 13; அஜாஸீஸ்: 15; தீன்: 16; ஜென்னத்து: 19; வசிய்யத்: 16; காபர்: 116; சுஜூது: 197; ஹராம் ஜாதா: 317; ஹாவியா: 391; மவுத். 798:

பழந்தமிழ்ச் சொற்கள் பல இவரால் கையாளப்பட்டுள்ளன. இருந்தாலும் எளிதில் பொருளறியும் தன்மையுடன் இலங்குகின்றன இக்காப்பியப் பாடல்கள். உவரி (கடல்), கயல், உரகம் (பாம்பு), மந்தி போன்ற சொற்கள் பயன்படுத்தப்பட்டுள்ளன.

தமிழ்ச்சொல்லையும் அரபுச்சொல்லையும் இணைத்துக் கூறும் பாங்கை 'அடைச் சொற்களின்' பயன்பாட்டில் கையாளுகின்றார்.

முரட் குபிர் (28) – (முரட்டுக் குபிர்கள்.)

திரண்ட வறபாத்து (29) – அறபாத் எனும் ஊர்; பையல் (96) முதலான வட்டார வழக்குகள் சிலவும் வழங்கப்பட்டுள்ளன. 'அ. ஆ. சபாசு' (உருதுச் சொல் 1288).

## யாப்பு

தமிழ்க் காப்பியங்களில் பல பா வகைகள் பயின்று அமைகின்றன. பா வகை மாறும்போது காப்பியம் கற்போருக்கு அலுப்பேற்படாது. அந்தந்த இடத்திற்கேற்ற பா வகைகளால் 'உணர்ச்சி' வெளிப்பாடு சாத்தியமாகிறது.

அறுசீர்க்கழி நெடிலடி, எழுசீர்க்கழி நெடிலடி ஆகிய ஆசிரிய விருத்தங்களும் கலி விருத்தமும் (4 சீர்) பெரும்பாலும் பயின்று வருகின்றன. கலிநிலைத்துறை (5 சீர்), கொச்சகம், சந்தக்கலித் தாழிசை விருத்தம், வஞ்சி விருத்தம், கலிப்பா வண்ணப்பாடல்கள் (2433–2439) ஆகிய பாடல் வகைகள் மட்டுமே இக்காப்பியத்தில் பயின்று வருகின்றன. **ஆசிரியப்பா வெண்பா, எண்சீர் விருத்தம் முதலானவை பின்பற்றப்படவில்லை.** இந்நூலெழுந்த காலக் கட்டப் பா வகையான வண்ணப்பா அமைப்பைச் சில பாடல்களில் கவிராயர் பின்பற்றியுள்ளார். அறுசீர்க் கழிநெடிலடிப் பாடல்களில் வேறு வேறு தளையமைப்புடைய பாடல்களும் பாடப்படுகின்றன.

### அறுசீர்க் கழிநெடிலடி

**மருந்தெனினும் பகுத்தருந்தி வந்தவர்க்கா**
**தரம்பெருக்கி வைய மெல்லாம்**
**பெருந்தலைமை நிலைநிறுத்திப் பீடுபெற**
**நிற்றவினாற் பகைபெற் றாலும்**
**பருந்துநிவந் திடுதுகிர்வாய்ப் பசுங்கிளியு**
**மொருதிருப்பஞ் சரத்தில் வாழும்**
**பொருந்துகொடு வரிப்புலியும் புல்வாயு**
**மொருதுறைநீர்ப் புகுந்துண் டாரும்** **(369)**

### ஏழுசீர்க் கழிநெடிலடி யாசிரிய விருத்தம்

**வித்தக ரான வலியவர் புதல்வ**
**ரனைவர்க்கு மேசலாம் விளம்பி**

யத்தனைப் பணிந்தா ரிந்நக ராள
வரசென நீரிருக்கு கென்றார்
மத்தகக் கரடக் கயமருப் பொசித்த
வாளலி மறுத்துவிட் டிருந்தா
ரத்தரு ணத்தின் சாமுநா டாளு
மரசரீ மாபியா வென்பார் (848)

### கலிவிருத்தம்

வால்க ளற்றன வாரிசெவி யற்றன
மேல்க ளற்றன வெண்மருப் பற்றன
கால்க ளற்ற புழைக்கைக ளற்றன
சால்ப ழிந்தவர் தானைக் கரிகட்கே (1230)

### கலிநிலைத்துறை

வீர மோநமை வெல்லுவான் வருதலும் வீரர்
யாரு மேசெயா வகைபுறங் காட்டலு மிழிவு
சாறு மென்றுனா மீட்டுமிங் கணைதலுந் தமரை
யார வேவிடுத் தோடலு மென்றிகழ்ந் தறைந்தார் (1202)

### சந்தக் கலித்தாழிசை விருத்தம்

வேதமோரலி புன்னகைக்கொடு பூவும்வானும் விதித்தவோ
ராதிநாய னமைத்தவாறல தொன்றுறாதென வுன்னியே
பேதமாயினை தீனைமாறினை பேசுமாறறி யாமலே
யோதினாய்நமை மாபியாவென வுயர்வுபேர்கொளு மறிவிலாய்
(1174)

### வஞ்சி விருத்தம்

என்றேயுது மான்மனி சைத்திடவே
நன்றேயென யார்கண வின்றனர்மு
னொன்றாமன ராயுலை வாய்மெழுகாய்
நின்றாரிரு கோவு நெருப்புகவே (905)

### கலிப்பா

தோள்வலியர் சேனைகளைத் துண்டம் படுத்துநெடு
வாள்வலிய ரிவ்வுலக மன்னர் முடியுருஞ்சுங்
தாள்வலிய ராலி தமைக்கொன் றிடநிகராக்
கோள்வஞ்ச மொன்றைத் தெரிந்து கொண் டேனரசே
(1323)

**வண்ணப்பாடல்**

**ஆலி மைந்தர்கள் சேனையி னோர்களெ**
**லாமிகுந்திடு கோபர்க ளாயடை**
**யாரிகன்றிடு சேனையின் மேல்விற-லரிபோலே**

**மேலவன்றனை யோதிறை யோனெழி**
**றூதையன்புட னேநினை யூஉமிகு**
**வீரமொன்றுபு தாவினர் வாளினை-யுறவீசி**

**யாலமென்றிடு பாதக ரோடம**
**ரேபுரிந்தனர் தீதரு மேயம**
**ராடி நின்றனர் தூயவர் தீயவர்-தமலேகை**

**காலறுந்தவர் தோள்களி னோடுவி**
**மேலறுந்தவ ராகிட வேபதி**
**னாயிரங்கறை வீரரையேருறு-முயிர்போக** **(2437)**

யாப்பெழுத்துக்களாக இந்நூலுள் உயிர், மெய், உயிர்மெய் ஆகியவற்றோடு வடமொழி ஒலியன்களைக் காட்டும் ஜகர, ஷ கர, ஸகர, ஹகர மெய்களும் உயிர்மெய்களும் பயின்று வரு கின்றன. இவ்வடவெழுத்துக்கள் அரபுச் சொற்களையும், வட சொற்களையும் பயன்படுத்துமிடத்து எடுத்தாளப்படுபவை யாகும். குற்றியலுகரங்களும் பல பாடல்களிலும் பயின்று வரக்காண்கிறோம். போன்றது: 2439, பிசக்கு: 2439; ஏருறு 2437;

**தூதையன்புடனே நினை யூஉமிகு** **(2437)**
**வென்றி வாளை யுரீஇப் படைமேவினார்** **(1987)**

எனும் பாடலடிகளில் இசைநிறை அளபெடை அமைந்துள்ளது. நாளிஃது (217) எஃகசாலை (85) ஷரஃவழி (850) போன்று ஆய்த எழுத்துக்களையும் யாப்பெழுத்தாகப் பயன்படுத்தியுள் ளார் கவிராயர்.

தமிழ் யாப்பு மரபுக்கு ஏற்ப எதுகைத் தொடை, மோனைத் தொடை ஆகியவை இக்காப்பியத்தில் எல்லாப் பாடல்களிலும் பயின்று வருகின்றன.

**மறந்திகழ் மனத்தரின் வாளி தைத்தரோ**
**விறந்தனர் வீரரப் பாசென் பாரென**
**விறந்திகழ் மனத்துசை னறையக் கேட்டுளே**
**நிறைந்தவோர் துயரொடு நிலைக லங்கினார்**

எதுகை, மோனை விகற்பங்களும் பாடல்களில் விரவிக் காணப் படுகின்றன. சில பாடல்களில் இியைபுத் தொடையமைந்து பாடலினிமை கூட்டப் படுகின்றது.

**நவிலும் பூதல மதித்திடும் வச்சிரக் கம்பங்கள்பல நாட்டி**
**நவம்தாகிய மாணிக்கக் கொடுங்கைக ணலமிகும்படி பூட்டி**
**யுவமையின்றியே விளங்கிடு மரகதவுத்திரங்களை மாட்டி**
**யவனி யுள்ளவர் கண்கவர் வனப்புறு மணிசிகரங் கூட்டி**
**(649)**

**பண்ணிரங்க வேதப் பயனிறகூல் வேதாம்பர்**
**கண்ணிரங்க யார்கள் கனிந்திரங்கக் காரிரங்க**
**விண்ணிரங்க நால்வர் மெலிந்திரங்க வெம்பிரங்க**
**மண்ணிரங்க மற்றெவையும் வாயிரங்க வேயழுத**

முதுமொழி (பழமொழி)களைப் பயன்படுத்திக் கருத்து விளக்கம் செய்யும் யாப்பியல் உத்தியையும் கனகவிராயர் கையாண்டுள்ளார். சகுபிகள் பாத்திமா(ரலி)வின் புதை குழி தோண்ட எண்ணியதை,

**கல்லின் னாருரிப் போமென்று கழறல்போல (349)**

என உவமையாகவும் விரிக்கிறார். மந்திர் மறுவான் தீய எண்ணம் கொண்டதனை,

**கூவிழிக் காக முக்காற் குளிப்பினுங் கொக்காங் கொல்லோ**
**தாவுறு மிழிஞ னென்ன தான்மிக வுயர்த்தி னாலுங்**
**கோவுழி யுறைய மச்சர் குணம்பெறு வானோ தீய**
**பாவியுள் கைத்து வேறு நினைந்தனன் பழிதான் கொள்ள**
**(949)**

எனும் பழமொழிகளால் விளக்குகின்றார் கவிராயர். பழமொழி களையே உவமையாகவும் பயன்படுத்துகின்றார். மொத்தம் பதினைந்து பழமொழிகள் இந்நூலில் அமைந்துள்ளன.[1]

வண்ண அமைப்பில், சிறப்பாக எண்ணு வண்ணம் பலயிடங் களில் இக்காப்பியத்தில் பயன்படுத்தப்பட்டுள்ளது.[2]

---

1. பாடல் எண்கள்: 349, 949, 1116, 1212, 1389, 1432, 1449, 1462, 1711, 2199, 2241, 2269, 2285, 2430, 2592.
2. 260, 637, 260, 1908, 1286, 1437, 1463.

**யிறையவ னருளு நூறா யிரத்திரு பத்து நாலாய்**
**நிறைதரு நபிகள் பாதநித்தமும் வழுத்து வேனே (7)**

இவ்வாறு பெருங்காப்பியக் கூறுகள் அனைத்தும் பெற்றுத் திகழ்கிறது. இம்முதல் தமிழ் இசுலாமியக் காப்பியம், கட்டமைப்பிலும், சொல்லாட்சி முதலான சிறப்பமைப்பிலும் இலக்கிய நயத்திலும் முதனிலை பெறுகின்றது. கனகாபிஷேக மாலையில் உள்ள மற்றொரு தனிப் பண்பாக இதில் காப்பிய வளர்ச்சிக்காகக் கிளைக் கதைகள் பயன்படுத்தப்படவில்லை என்பதைக் குறிப்பிடலாம். நான்கு பரம்பரையின் வரலாறுடைய காப்பியமாதலால் கிளைக்கதைகள் இல்லாமலே அளவில் பெரிதாக அமைகின்றது இது. முடிவை நோக்கி இக் காப்பியத்தின் குவிவு மையம் மிக விரைவாகச் செயல்படுவதால் கிளைக்கதைகளின் அவசியமேற்படவில்லை எனத் தோன்று கிறது. இக்குறைபாட்டைப் பழமொழிகளையே உவமையாகப் பயன்படுத்துவதால் நிறைவு செய்கிறார். வேறெந்தக்காப்பியங் களிலும் காணவியலாத அளவுக்குப் பழமொழிகளை உவமை யாகப் பயன்படுத்தியிருப்பது இதனாலிருக்கலாம். மேலும் தம் புரவலர் பற்றிய செய்தியை உவமைகளாகவே இருபத்தி யொரு இடங்களில் பயன்படுத்தியுள்ளதும் குறிப்பிடத்தக்க தாகும்.

## கால இட எல்லை

இக்கதை மதீன மாநகரையும் அதைச் சுற்றியுள்ள அரபு நகர்களையும் களமாகக் கொண்டுள்ளது. ஷாம், நகரம், மிசுறு முதலான நாடுகளைச் சார்ந்தும் சில செயல்பாடுகள் சுட்டப் படுகின்றன. இக்காப்பியத்தின் முக்கிய நிகழ்ச்சியான உசை னார் ஷகீதாகியது, 'கறுபலா' எனுமிடத்திலாகும். இவ்விடம் பற்றியும் விரிவான விளக்கத்தை இக்காப்பியம் கொண் டுள்ளது.

இக்காப்பிய நிகழ்ச்சிகளில் பெரும்பாலானவை சரித்திரத் தில் நிகழ்ந்தவையாகையாலே அவை ஒரு காலக்கட்ட வரை யறைக்குள் உட்படுத்தப்பட்டுள்ளன. எனவே கால இட எல்லையில் ஒரு ஒழுங்குமுறையைக் கனகவிராயர் கையாண் டிருக்கிறார்.

இவ்வாறு, சிறந்த தமிழ்ப் பெருங்காப்பிய வரிசையில் கனகாபிஷேக மாலையும் உட்படுத்தப்படுமென்பதில் ஐயமில்லை.

# கதை மாந்தர்

காப்பியத்தின் இன்றியமையாத கூறு, கதை மாந்தர் படைப்பாகும். ஒரு காப்பியத்தின் எழுச்சிக்கும் மேன்மைக்கும் அடிப்படையாக அமைவதும், பலவிதப் பண்புகள் கொண்டமைவதும் பாத்திரங்களின் தன்மையாகும். தலைமைப்பாத்திரங்களோடு துணைப்பாத்திரங்கள் பல அமைந்து அத்தலைமைப் பாத்திரங்களின் பண்பு நலனைச் சிறப்பித்து நிற்கச் செய்கின்றன. காப்பிய இயக்கத்தில் கதை நிகழ்ச்சிகளை ஒரு களனிலிருந்து மறு களனுக்கு நகர்த்திச் செல்வதே இப்பாத்திரங்கள்தான்.

பாத்திரங்களை, தலைமைப் பாத்திரங்கள், துணைப் பாத்திரங்கள் எனப் பொதுவாகப் பிரிப்பர். தலைமைப் பாத்திரங்கள் படிப்படியாக வளர்ந்து செல்லும் பண்பினை உடையனவாயமைதல் காப்பியச் சுவைக்கு இன்றியமையாதது ஆகும். புலவனது உலகியல் பற்றிய எண்ணங்களையும் வாழ்வியற் செய்திகளையும் வெளிப்படுத்துவதற்குக் களனை ஒதுக்கித் தருவதும் இப் பாத்திரங்களே.

தலைமைப் பாத்திரங்கள் எவ்வாறு படைக்கப்பட்டு கற்பவரால் உணரப்படுகின்றனவோ அதற்கேற்பவே ஒரு காப்பியத்தின் வெற்றி அமைகிறது. கற்பிதமான கதைக் கருவையுடைய ஒரு காப்பியத்தில் புலவனின் நோக்கிற்கு ஏற்பப் பல துணைப் பாத்திரங்கள் கற்பிதமாகவே படைக்கப்பட்டு, புலவனின் நோக்கத்தை நிறைவேற்றுகின்றன. ஆனால் வரலாறை அடிப்படையாகக் கொண்ட கதையில் கற்பிதப் பாத்திரங்களை நினைத்த இடங்களிலெல்லாம் புலவரால் படைக்க முடிவதில்லை. வரையறுக்கப்பட்ட வரலாறு, சமயக்கொள்கை ஆகியவற்றை அடிப்படையாகக் கொண்டு காப்பியம் இயற்றும் போது இச்சிக்கல் இன்னும் வலுவுடைகிறது. ஒரு வகையில் கவிஞனின் கற்பனைக்குதிரைக்குக் கடிவாளம் பூட்டிய தன்மை

யாக இது அமைந்து விடுகிறது. இதனால் பாத்திரங்களின் செயல்பாட்டுத் தன்மையானது பாடுபொருளின் வகைமைக் கேற்ப உருக்கொள்கிறது. அரிஸ்டாடில் கதையைவிடக் கதாபாத்திரங்கள் முக்கியத்துவம் வாய்ந்தவை என்கிறார்[1]. பாத்திரங்கள் உண்மையானவையாக இருந்து நாடகமாகப் படைக்கப்படும்போது சலிப்புத்தன்மை தோன்றுவதில்லை என்கிறார் கெர்[2].

கனகவிராயரின் கனகாபிஷேக மாலையில் அமைந்த பாத்திரங்களைத் தலைமைப் பாத்திரங்கள், துணைப் பாத்திரங்கள் என இரு பிரிவாகப் பாகுபடுத்தலாம். கனகாபிஷேக மாலையின் கடவுள் வாழ்த்துப் படலத்தில்,

**பரிவுறு முசைன்வா றெல்லாம் பகரமுற் றுரைவி ரிக்க (18)**

**கோமக னுசைனார் காதை குலத்தமி ழரங்கஞ் செய்தான்**
**காமருகாளை யன்ன கனகவி ராயன் மாதோ (26)**

என்றெல்லாம் காப்பிய நோக்கினைக் கூறும் அதே நேரத்தில்,

**நபிமுத லெண்மர் வேத நாயக ராகி யென்றுங்**
**கவினுற வுலகிற் செய்த கனகாபிஷேக மாலை (24)**

என்றும் குறிப்பிடுகிறார் கவிராயர். எனவே காப்பியத் தலைவர் 'உசைனார்' தான் என்று அறுதியிடுவதில் சிக்கலிருக்கிறது. இக்காப்பியத்தில் தலைமைப் பாத்திரங்களாக எண்மரையும் கொள்ளலாம்.

## பெருமானார் நபிகள் நாயகம்

உலகம் படைக்குமுனம் படைக்கப்பட்டோ ரொளியிற் பிரிவானோர் நலமொன்றியவெந் நபிகளுக்கு மொரு நாயகரா நபியானோர் (74) என்று வேத உண்மையை உட்கொண்டு நாயகம் அவர்களை அறிமுகப்படுத்துகின்றார் கவிராயர். நாயகமவர்களின் இறுதிக் காலத்தில் இக் காப்பியக் கதை நிகழ்ச்சி தொடங்குகிறது. வானவர்க்கரசர் கூறும் வாய்மையால் வையங்காத்துப் போனகம் சுருக்கிக் காணாப் புதுமைகள் பலவுங் காட்டித் தீனையும் விளக்கி வேதத் திருநபி இனிதிருந்தார்.

---

1. Aristotle, On the Art of Poetry, P. 38.
2. W.P. Ker, Epic and Romance, P. 20.

வானவர் ஜிபுறயேல் அண்ணல் நபியின் தோழராம் 'திஹ்யத்துல் கல்பீ' போல அவருடைனேயே இருந்து இனிது உரையாடி நிற்கிறார். சொர்க்கக் கனியை ஜிபுறயேல் கொண்டு வந்து ஈந்தபோது இபுலீசு (சைத்தான்) இரவலன் போல அதனைக் கைப்பற்ற முனைந்தபோது ஜிபுறயேல் முனிந்து அவனை விரட்டுகிறார். ஆனால் கனிவே கனியும் முகம்மதர் அருள் நோக்கிலிருந்து மாறாது நிற்கிறார். தீன் வழியைப் பரப்பிக் குபிர் நீக்கி அருள் பொழிந்த நபி பெருமானையே இம்முதற்காட்சிகள் விளக்குகின்றன. ஆதி நபியின் தோற்றம் கூறும்போது சீறா இயற்றிய உமறுப்புலவர்;

**ஆதி நாயகன் திருவொளி வினிலவ தரித்த**
**வேத நாயகமே (13)**

எனக் குறிப்பிடுகின்றார். அத்திருவொளியில் வந்த ஒளி விளக்காம் பெருமானார் தம் பேரர்களின் மீதுள்ள பாசத்தை வெளியிடும் காட்சியைக் கனகாபிஷேகமாலை காட்டுகிறது. ஜிபுறயேல் நபியின் பேரர்களுக்கு நிகழப் போகும் துன்பத்தை எடுத்துச் சொல்லும்போது,

**வீறானவேத விளக்கே விளக்கொளியே**
**மாறாத வாய்மை முகம்மதே மாந்தரெலாம்**
**பேறாக வந்த பெரும் பேறேதும் பேரர்தம்பா**
**லாறா வினைவந் தடைவதுநீர் கேளுமென்றார் (142)**

அவர் உரைத்த வினைச் செய்தி கேட்ட முகம்மதர் மனநிலையைக் கனகவிராயர் காட்டும் முறையில் பாசம் மிக்க ஒரு குடும்பத் தலைவரையே காணுகிறோம்.

**அத்தகைமை வானோர்க் கரசருரைப்பக் கேட்டுக்**
**கத்தனிற சூல்புலம்பிக் கண்ணீர் கவுளலைத்து**
**முத்தி தரும்வேத முதலோ னருளிதென.... (145)**

இந் நிகழ்ச்சி அண்ணலின் மனதையும் உடலையும் பாதித்தது. இதனை,

**ஆலநந்நபி மெலிந் தழற்சி பொங்கியே**
**சாலவு முளத்தினிற் றயங்கி (154)**

என்றும்

**நினையில ரிம்மையி னிலையும் வாழ்வையும்**
**பனிமதி வதனபங் கயமுங் கன்றினர்**
**முனைவலி யடங்கினர் முயங்கி மூன்று நாண்**
**மனைமிசை யிருந்தனர் முகம்ம தண்ணலே (159)**

என்றும் கவிராயர் காட்டுகின்றார்.

மாவியா முதலான நபித் தோழர்கள் இச்செய்தியை வினவி ஆறுதல் கூறிச் செல்கின்றனர். அப்போது மாவியா 'யார் அக்கொடிய செயல் செய்வர்' எனக் கேட்கிறார். முன்னொரு சமயம் மாவியாவின் தோள், தன்தின் நகப்புயம் படுதல் கண்டு 'இன்னவர் பகை நமக்கென் றெண்ணினர்' அண்ணல். அதனை ஓர்ந்து அதனையும் மனதில் ஒளித்து வைக்காது 'உன் மகனால்தான் என் பேரர்க்குத் துன்பம் வரும்' என்று புகன்ற மனக்கரவு இல்லாத் தூயரைக் காட்டுகின்றார் கவிராயர். காவியத்தின் முதல் சிக்கலே, நபியவர்களின் கூற்றால் மாவியாவின் செயல்பாட்டில் ஏற்பட்ட மாற்றத்தி லிருந்து தொடங்குகிறது. இது போலவே 'மறுவான்' எனும் தீய குணமுடையான் எதிரியானதும் நபியவர்கள் நேர்மைத் தீர்ப்பு உரைத்ததன் பின்னரே என்று காட்டுவர் கவிராயர். அபூபக்கரின் மகனோடு வீணில் 'மலைந்து' பொய் வழக்கிட்ட குற்றவாளி மறுவானை, ''திவ்விய முடிகளைந்து திகழிவ்வூர்ப் புறம்பு செய்மிங் இழிவினன் ஆகாவென்றிசைத்தனர்'' (203) எனவே காப்பியக் கதையின் உச்ச நிலைக்குக் காரணமான இரு தீய பண்பினரை நபியவர்களின் கூற்றிலிருந்தே முதலறி முகம் செய்வது சிறப்பான காப்பிய உத்தி ஆகிறது.

இதன் பின்னர் நபியவர்கள் கடுஞ்சுரத்தால் பாதிக்கப் பட்டார். இறைத்தூதராயினும் இம்மண்ணில் பிறந்த மானுடரெல்லாம் படவேண்டிய துன்பமிதென்றும், ஒருநாள் உயிர் நீப்பது உண்மையென்றும் உலகுக்கு உணர்த்தவே இறைவன் இதனை நபியவர்கள் மூலம் வெளிப்படுத்தினான் என்பர். இந்நோய் வந்தபோது தம் மனைவியார் ஆயிசாவின் மனையிலிருக்க விரும்பினார் நாயகம். இது பற்றிப் பிறமனை யார்களின் கருத்துக் கேட்டார். அவர்கள் நபி பெருமானின் கருத்துக்கு இசைந்தனர். ''ஆதலா லுங்களுள்ளத் தபிப்பிராய மதே தென்ன'' (208) என்று அவர்களிடமே கருத்துக் கேட்டது நபியவர்கள் பெண்மைக்குக் கொடுத்த ஓர் மதிப்பாகவும், பிறர் கருத்துக்கும் மதிப்பளிக்கும் மாண்பாகவும் நிலை நிற்கிறது. இதனைச் சிறப்பாகக் கவிராயர் வெளிப்படுத்தி விடுகி றார்.

நபியவர்களின் பிணியறிந்து வருந்திய சகாபிகளிடம் அவர் மொழிந்த மொழிகள் வேதத்தின் பொருளை எடுத்தியம்பு வதாகவும் உலகில் பிறந்த மன்னுயிர்களின் கடமையை வலியுறுத்துவதாகவும் அமைந்துள்ளன. உலகில் பிறந்த

மானுடரில் நபியவர்களாயினும் பிணிபிடியாதவரில்லை; நோயும் அதனை நீக்க மருந்தும் இறைவன் படைத்தளித்துள்ளான்; இவ்வுலக வாழ்வின் காலம் முடியும்போது மருந்தினால் பயனில்லாது போகும்; துன்பங்களும் வறுமையும் வாட்டிடினும் இறைவனின் கருணையை மனதிலிருத்திப் பேதலியாமல் தீன் வழியைக் கடைப்பிடியுங்கள் (214, 215). இவ்வுலக வாழ்வே நிலையானதென்று நம்பினால் கேடு விளையும். இறைவனின் கருணையை மறவாமல் நல்வாழ்வு வாழுங்கள் (217) என்பன அவை. அப்போது ஜிபுறயேல் (அலை) வந்து உங்கள் உள்ளத்தில் உள்ளதனை இயம்புக என்றபோது 'எனது உம்மத்துகள் (நபி வழியில் இறையை ஏற்றோர்) பெறும் துன்பத்தை நினைந்தே வருந்துகிறேன் (220) என்று சொன்னார் நபிபெருமான். இவ்வாறு தனது இறுதிக்காலம் அடுத்ததறிந்து இறை நேயர்களை மதீனத்திற்கு அழைப்பித்து, 'பாரினிற் செய்த குற்றம் பாரில் யான் தீர்க்கவேண்டும் நேரில் வருக வென்றே' கூறித்தான் குற்றம் செய்திருந்தால் இப்போதே தண்டனை கொடுத்து விடுங்கள் என்றார். தன்னலம் கருதாத் தகைசான்ற இறைத்தூதரின் பாத்திரப் படைப்பு கனகாபிஷேக மாலையில் தனித்திலங்குகின்றது.

## அபூபக்கர் (ரலி)

அபூபக்கர் அவர்களிடம் பல்வேறு பண்பு நலன்கள் சிறந்திருந்தாலும் மேலோங்கி நின்ற அரும்பண்பு 'அருள்' என்பதாகும். இவர்தம் பாத்திரப் படைப்பில் பல இடங்களில் அருளுடைமை வெளிப்படுமாறு பாடியுள்ளார் கவிராயர். அபூபக்கர் அவர்களது வரலாறு பற்றி ஆயும்போது, பெருமானார் இசுலாத்தைப் பரப்ப முனைந்து பெரும்பொருள் தேவைப்பட்டபோதெல்லாம் பொருளை ஈந்த அருளுடைமையாளர் இவர் என்பது போதரும். நபித் தோழரான 'பிலால்' அவர்கள் பெருந்துன்பமடைந்தபோது அவர்களை அடிமை மீட்டு உரிமை வழங்கத் துணை நின்றவர் இவரேயாகும். பெருமானாரே, தன்னால் நன்றிக் கடன் ஆற்ற இயலாது இறைக்கடனாக எஞ்சி நிற்பது அபூபக்கருடைய அருளுதவியே எனப் பாராட்டும் அளவுக்கு விஞ்சி நின்றதும் அவர் தம் அருளுடைமையாகும். இதனாலேயே நபியவர்கள் இறுதித் தொழுகைக்கு அபூபக்கரை இமாமாக்கித் தானும் இறையன்பர்களும் பின் நின்று தொழுமாறு செய்தனர். தனக்குப் பின்னர் 'இமாம்' பதவி அபூபக்கருக்கு எனக்குறிப்பினால் நபியவர்கள் அன்றே உணர்த்தினார்கள்.

**முன்னமே அபூபக்கரை முன்னிலை**
**தன்னில் நந்நபி வைத்த தகுதியால் (287)**

இன்ற நேசர்கள் அபூபக்கரின் தலைமையை ஏற்றனர் என்கிறார் கவிராயர்.

**வேறுயோசனை யொன்றிலை வேதநூல்**
**தேறு மேன்மையர் சீர்நபிக் காக்கத**
**மூறு பெற்றுயர் மேன்புகழ் தாங்கிய**
**பேறி னாரன்றி யில்லெனப் பேசினார் (288)**

நபி பெருமானின் அருமைத் துணைவியார் அன்னை ஆயிஷா அவர்களின் தந்தையான அபூபக்கர் அவர்களே முதன் முதலில் இசுலாத்தை ஏற்ற ஆடவர். அண்ணலின் இன்னுயிர்த் தோழர் 'திறலபூபக்கர்' 'எழிலபூபக்கர்' என்றெல்லாம் கவிராயரால் போற்றப்படும் இவர் அரசேற்ற பின்னும் மக்களுக்குக் கொடையளித்துச் சீர்புகழ் கொண்டார் (294). 'தீளைந்த அபூபக்கர்' (303) 'தன்னரசு பேரரசெனத் தலைமை செய்தார், (302) 'பொய்ப் பதரகற்றி' (304), செழுமையோ டறங்களும் வளர, (308 )'அருள் கரத்தர பூபக்கர்' (309) அரசாண்டிருந்த காலத்தில் நபியவர்களால் விரட்டப்பட்ட 'மறுவான்' தன் குலத்திருப்பவும் நல்க எனக் கடிதமனுப்பினன். நந்நபியவர்களால் விரட்டப்பட்டவனை நாம் ஏற்பதா எனக் கோபங் கொண்டு உளங்கொதித்தார் அவர். அவனை 'சாம்' நகரினின்றும் துரத்தப் பணித்தார். இது அபூபக்கர் அவர்கள் அண்ணலின் சொல்லுக்கு எவ்வளவு மதிப்பளித்தார் என்பதைக் காட்டுவதாக அமைகிறது. 'பெருமானாரிடம் இது போன்ற நம்பிக்கை கொண்டதாலேயே 'நம்பிக்கையாளர்' (சித்தீக்) என்ற சிறப்புப் பட்டமும் பெற்றவராகிறார். நபி பெருமானாரின் பின்னர் அபூபக்கரின் பெருந்தொண்டாலேயே பன்னாடுகளிலும் இசுலாம் வேர்விட்டுத் தழைத்தது. முன்பு கயவர்களிடமிருந்து கரந்திருக்கத் 'தெளர்' எனும் குகையில் மூன்று நாள் நபிபெருமானோடு தங்கியிருந்த அருந்தோழராம் அபூபக்கரை, பாத்திமா (ரலி) அவர்கள் இறக்குந்தறுவாயிலும் போற்றுவதைக் காட்டுகிறார் கவிராயர்.

**நபியரசுரிமை பூண்ட நல்லபூ பக்கர் தம்மை...தகுதியிற்**
**புகழ்ந்து போற்றி .... (324)**

மறைந்து போன பாத்திமா அவர்களை அலியாரும் பின்னோரும் நபி பெருமானின் அடக்கத்தலத்திற்கு இடது பாகத்தில்

அடக்கி வந்தனர். சில இறை நேயர்கள் இதனை எதிர்த்து நின்றனர். அங்கு வந்த 'நீதியும் பொறையும் வல்ல நெறியபூ பக்கர்' நீதியை எடுத்துக்கூறி அவர்களை அமைதிப் படுத்தினார் (353). இவ்வாறு நபிதிருமொழி வழாமல் நன்னெறியரசு பூண்டு புவியொரு குடையில் செய்த புகழபூபக்கர் பிணியினால் வருந்தி இறுதிக்காலம் வந்ததென உணர்ந்து (355) அப்பாசு என்பவரை அழைத்து 'உமறை'க் கோன் எனக் கூறிச் சொர்க்கம் புகுந்தார். உமறு உதுமான் அலியார் முதலான இறையன்பர் கள் அழுது சோர்ந்தனர்.

இவ்வாறு நந்நபியின் அருமைத் தோழராம் வள்ளல் அபூபக்கரின் குணநலன்களை மிகக் குறைந்த பாடல்களிலேயே எடுத்தியம்பி விடுகிறார் கனகவிராயர்.

## உமறுகத்தாபு

நாயகத் தோழர்களில் அபூபக்கரின் பின் பெருமானாருக்குத் துணைவராகவும் தோழராகவும் அமைச்சராகவும் செயலாற்றிய தகுதியுடையார் உமறுகத்தாபு. இசுலாத்தை ஏற்பதற்கு முன்னர் இறைநேயர்களை எதிரிகளாகக் கருதியவர் இவர். அபூஜகில் எனும் கொடு மனத்தானால் ஏவிவிடப்பட்டு நபியவர் களைக் கொல்லப் புறப்பட்டவர் உமறு. தம் வீடடைந்தபோது தங்கை பாத்திமா இறை வேதம் ஓதுவதறிந்து அவரைத் தாக்கிக் காயப்படுத்தினார். பின்னர் உடல் சுத்தம் செய்து வந்து அவ்வேதத்தை வாசித்தபோது இறையருள் உளத்தில் சுரக்க இசுலாத்தில் பற்றுக் கொண்டார். இசுலாத்தைப் பரப்ப வீரம் பொருந்திய 'உமறை' என் பக்கமாக்குக என நபி பெருமான் இறைவனை இறைஞ்சியதால், இம்மாற்றம் ஏற்பட்டு நபி பெருமானின் தோழரானார் உமறு என்பது வரலாறு.

நபியவர்களின் வீரத்தோழராக உமறுகத்தாபு மாறிய பின்னர்தான் எதிரிகளுக்குப் பயந்து மறைந்து இறையைத் தொழுதவர்கள் எல்லாம் வெளிப்படையாக, கஃபா முதலான தலங்களில் அச்சமின்றித் தொழத் தொடங்கினர். இசுலாம் விரைந்து பரவத் தொடங்கியது. இப்புகழ் கொண்ட வீரரான உமறுகத்தாபு, அபூபக்கரின் பின்னர் தலைமைப் பொறுப்பை ஏற்றார். இறை வழியை ஏற்காத புல்லரைக் களமறுத்து நின்றகோல் கொண்டு ஒரு குடையிற் புவியை ஆண்டார். கொடைத்தன்மையிலும், நீதி தவறாது நிற்றலிலும் உமறு கத்தாபு புகழ் மிக்கவரானார்.

**மருந்தெனினும் பகுத்தருந்தி வந்தவர்க்கா**
**தரம் பெருக்கி வைய மெல்லாம்**
**பெருந்தலைமை நிலை நிறுத்திப் பீடுபெற (369)**

ஆட்சி செய்தார். இவரது நீதி தவறாத ஆட்சிக்குச் சான்றாகத் தவறு செய்த தன் மகனையே தண்டித்த நிகழ்ச்சியை வரலாற்றாசிரியர்கள் காட்டுவர். கனகாபிஷேக மாலையில் அவரது நீதிச் சிறப்பைக் காட்ட எண்ணிய கனகவிராயர் புலியும் மானும் ஒரு துறையில் நீர் குடிக்கும் சிறப்புப் பொருந்திய நாட்டினை உடையர் எனப்பாடுகின்றார்.

**பருந்துநிவந் திடுதுகிர்வாய்ப் பசுங்கிளியு**
**மொருதிருப்பஞ் சரத்தில் வாழும்**
**பொருந்துகொடு வரிப்புலியும் புல்வாயு**
**மொருதுறை நீர்ப் புகுந்துண்டாரும் (369)**

இறைவன் ஏவலை மறுத்த தன் கண்மணி போன்ற 'சேயை' நெறியறியும்படி உயிர் தீருமட்டும் அடிக்குமாறு பணித்துப் புவி புரந்த நீதியாளர்' என அவர் தம் சிறப்பைக் கனகவிராயர் பாடுகின்றார் (370)

**ஊன்றுபெரும் படைகுடி கூழ் அமைச்சரொடு**
**நட்பரணாக்கி அரசாண்டார் உமறு என்கிறார் (372)**

கவிராயர்.

ஒருநாள், நிலத்தில் வீழ்த்தி இழந்துபோன எண்ணெய்க்கு இரங்கி நின்ற மாதுக்காகப் புழைவாய் மிதித்து எண்ணெய்யைத் திரும்பப் பெறச் செய்தார். 'விரும்புக நின் குடத்தளவு, மிக விரும்பேல்' என்று நீதியும் உரைத்தார் உமறு (374). உமறு கத்தாபின் ஆட்சிக்குடைக் கீழிருந்த மக்கள் எல்லாம்,

**வருவிருந்து தனைக்காப்பார், செல்விருந்து**
**தனையோம்பி வகுக்கு மேலாம் (377)**

திருவடைந்தனர் என்கிறார் கவிராயர்.

உமறு, வீரத்திற் சிறந்தவராதலாலே 'அரியேறு' என்ற அடையைக் கவிராயர் பலவிடங்களிலும் பயன்படுத்துகின்றார்.

நவசேருவானெனும் அரசனின் மகனான அறுவான் தீன் வழி ஏற்க மறுத்தபோது தண்டிக்க ஆணையிட்டார். அலியாரின் வேண்டுகோளுக்கு இணங்கி அவன்தன் பெண்மக்களான சகருவானையும், நாசுநூனசையும் விடுவித்தார் உமறு. அவர்கள்

உம்முசல்மாவிடம் இறைவேதம் கற்றுத் திரும்பியபோது 'சகருவான்' என்பவளை அரசர் உமறு மணக்க எண்ணங் கொண்டு தூதனுப்பினார். அவள் சுயம்வரம் வைக்கக் கூறினாள். அரசர் அதனை ஏற்றார். அவளது வேண்டுகோளுக் கிணங்க அவர்களுக்காக அவர் தம் தந்தை சேர்த்து வைத்த பொன்னைத் திரும்ப அளித்தார். சுயம்வரம் நிகழ்ந்தது. அவள், எமை வதைக்க முன்புகன்ற மன்னருக்கு மாலையிட மனமில்லை என்றாள். இறுதியில் உசைனாருக்கு மாலை யிட்டாள். இதனை ஏற்ற 'கொடையார் கையாருமறு' (717) அவர் தம் திருமணத்தைச் சிறப்பாக நடத்திக் கொடுத்தார். இவையெல்லாம் உமறுகத்தாபின் நேர்மைவழாத குண நலன் களை எடுத்துக் காட்டுவன ஆகும்.

'அபுலூல்' எனும் வணிகர் ஓர் அடிமைப் பையனை வாங்கி வந்தார். அவர் சரியாக உணவளிக்கவில்லையென ஒருநாள் அவ்வடிமை உமறுகத்தாபிடம் வந்து முறையிட்டான். இரண்டு பங்கு விலை கொடுத்து அவனை வாங்கிய உமறுகத்தாப் தமது ஏவல் பையனாக ஆக்கிக் கொண்டார். அவன் நிறைய உருவங் கள் செய்து வணங்குவதறிந்து உமறு தண்டித்தார். அவன் எதிரியானான் (785). உமறு வேந்தருக்கு உற்றவன் போல நடித்துச் சமயம் நோக்கிக் காத்திருந்தான். பன்னிரண்டரை யாண்டுகள் உமறு நல்லாட்சி நடத்தினார். ஒரு நாள் தொழு வதற்காகப் பள்ளி சென்றார். ஒளித்திருந்த அவ்வடிமைப் பையன் சூரியால் உமறைக் குத்தினான். உமறு துடித்து வீழ்ந்த காட்சியைக் கவிராயர்,

**சேன முங்கிளி யும்மொரு பஞ்சரஞ் சேர**
**மானும் வெம்புலி யும்மொரு துறையில்வா ருண்ண**
**வீன வெம்பகை யறுநெறி நடத்துமெங் கோனுக்**
**கூனமாம்பகை யாவரென்றுன்னுவார் தேரார் (791)**

என்று பாடுகின்றார். வீழ்ந்த உமறுகத்தாபிடம், 'உமதரசு எவர்க்கென மொழிய,

**நீரெ மக்கர சீந்தவர்; நுமதுள நேர்ந்த சீர ருக்கணி**
**முடிதிக ழாத்தரிக்குக என்றார்; தோழரில் ஒருவரை இயம்பில்**
**போரிருக் குமென்றுளத்தினி னினைந்த அபூபக்கர் (805)**

என்றார். உமறுகத்தாபு இவ்வுலகு நீத்த போது மக்கள் புலம்பினர்.

மதின நாட்டுளார்க் கன்னையா யரசர்ராய்க் குருவாய்
நிதியு மாயினர் நிகரில ரிறத்தன ரென்றப்
பதியிலுள்ளவ ரியாவரு முளமிகப் பதைத்தா
ருதவியில்லரே யாயின மெனவுரைத் தழுதார் (819)

உமறை அடக்கச் சென்றபோது அண்ணலாரின் கபுறு திறந்து உமறைத் தன் கபுறுக்கு இடமாக வைக்குமாறு அசரீரி எழுந்தது. அபூபக்கர் தோளில் வலக்கையும் உமறு புயத்தி லிடது கையுமிட்டு நபியவர்கள் இருக்கக் கண்டனர் இறையன்பர்கள். கபுறுமூடிக் கொண்டது. உமறு சொர்க்கம் அடைந்தார்.

உமறு கத்தாபின் வீரம், கொடை, அருள், பெருந்தன்மை, நீதி வழாத்தன்மை ஆகியவற்றை வலியுறுத்துவதாகப் பாடியுள்ளார் கனகவிரா்யர். ஏழைக்கொரு சட்டம் செல்வனுக் கொரு சட்டம் என்ற நிலை அகற்றப்பட வேண்டும் எனும் பெருமானார் வகுத்த நீதி நெறியை நிலைநாட்ட அயராது உழைத்த உமறு கத்தாபின் வாழ்க்கை நெறியைச் சிறப்பாக எடுத்தோதுகிறார் கவிராயர். உமறுகத்தாபின் பாத்திரப் படைப்பு மனம்விட்டகலாத தன்மை பெறுகிறது இக்காப்பியத்தில்.

## உதுமான் (ரலி)

உமறுகத்தாபின் பின்னர் தலைமைப் பதவியேற்றவர் உதுமான் (ரலி) அவர்கள். அபூபக்கரைத் தொடர்ந்து தொடக்க காலத்திலேயே இசுலாத்தை ஏற்றுக் கொண்டவர் இவர். மதீனா, அபிசீனியா ஆகிய நகரங்களுக்கு இறைவழி பரப்பச் (ஹிஜ்ரத்) சென்றவர். நபி பெருமானின் திருமகளான றுக்கையா என்பவரை மணந்தவர். றுக்கையாவின் இறப்பின் பின் நபியவர்களின் மற்றொரு மகளான 'உம்முகுல்தும்' என்பவரை மணந்து கொண்டார் உதுமானார்.

இறைவனால் இறைத்தூதருக்கு ஓதப்பட்ட இறை வசனங்களைப் படியெடுத்துப் போற்றிய பெருமையினாலேயே உதுமானார் 'சொர்க்கவாசி' என நாயகம் அவர்களால் போற்றப்பட்டார். திருமறையைக் காக்கப் பலபடிகள் எடுத்துப் பல நாடுகளுக்கும் அனுப்பி வைத்த பெருமையும் இவரைச் சாரும். இதனால் 'தெருள் உறும் உதுமான்' என்ற அடைச் சொல்லால் பாராட்டப்படுகின்றார். உமறுகத்தாபு தனக்குப் பின் அரசு யாருக்கு எனக் கூறாது 'நீங்களே தேர்வு செய்க'

என இறையன்பர்களிடம் அப்பொறுப்பை விட்டார். அலியிடம் மக்கள் தலைமை ஏற்கக் கூறினர். அவர் மறுத்தார் (843) உதுமானிடம் வேண்டினர். அவர் இறைவனைத் தொழும் பணியிலிருக்கும் எனக்கு உலகாள்வது தகுமோ, என்று பல நியாயங்கள் இசைத்தார் (844). நிலம் ஆள்வதில் பல பாவம் நேரும், பழிவந்து சேரும் என்று கூறி மறுத்துரைத்தார் (845). அன்றிரவு முன்பு நபித்தோழராயிருந்து 'சாம்' நாட்டை ஆளும் மாவியா தம் குலத்தார் ஆட்சிக்கு வரல் வேண்டுமெனச் சதி செய்தார். கணையாழியை மறைத்து வைத்தார். அலியாரின் இடையீட்டால் அச்சதி முறியடிக்கப்பட்டது. அம்மாவியாவே உதுமானை முன் மொழிந்தார். அரசேற்க,

**மற்றையரிருவருண் மாண்பு மேவியே**
**முற்றுது மானென்பார் முதல்வ ராதலி**
**னற்றவர்க் கரசுமுன் னல்க லேநெறி** **(870)**

என்றார். உமையா குலத்தைச் சார்ந்த உதுமான் பதவி ஏற்றதும் 'ஆசிங்' குலத்தினர் உளங்குமைந்தனர்.

இம் முற்பகுதியில் உதுமானார் இறைத்தொண்டு செய்வதே கடமையென்றிருந்த இறைநேயராகவே காட்சியளிக்கிறார். இதனைக் கவிராயரும் செவ்வனே எடுத்தியம்புகின்றார்.

உதுமானாரை 'இயன்மறை உதுமான்' (878) என்றே கவிராயர் குறிப்பிடுவது, அவர் இறைவேதத்தைப் படியெடுத்த பெரும்பணியைக் குறிப்பதாக அமைகின்றது. மேலும் இதனை

**பழுதறு மிறைவன் வானப் பலகைகண் டரிய வேத**
**மெழுதிய நல்லோர் வாசக் குங்கும வெழில் கொள்தாரார்**
**(882)**

எனும் பாடலிலும் வலியுறுத்துகின்றார். இவ்வாறு போற்றப் பட்ட உதுமானார் வஞ்சர்வலைப்பட்டுக் கொலைப்பட்டது எவ்வாறு? அலியார் மீது வஞ்சங் கொண்ட மாவியாவுக்கு அரசுச் சீரளித்து அவரால் ஊர்க் காவலனாக்கப்பட்ட மறுவானை அமைச்சனாக்கிக் கொண்டது ஏன்? மறுவானோ, முன்பே நபிபெருமானால் நாடு கடத்தப்பட்ட நயவஞ்சகனா யிற்றே? இது கூறியல்லவா அபூபக்கர் (ரலி) அவனை மறுத்து ரைத்தார். இவ்விடத்தில்தான் உதுமானாரின் பாத்திரப் படைப்பில் ஒரு வீழ்ச்சியைக் கவிராயர் அறிந்தோ அறியாமலோ செய்து விடுகின்றார்.

அலியாரையும், உசைனாரையும் முதன்மைப்படுத்தும் ‘ஷீயா’ப் பிரிவினரின் கருத்து முதல் மூன்று கலீபாக்களும் அரசுரிமையைக் கவர்ந்து கொண்டவர்கள் என்பதாகும். அக் கருத்தில் இம்மூன்று கலீபாக்களையும் ஒதுக்குவது அவர்தம் கொள்கையாக இருந்துள்ளது. இந்நெறியில் சிறிது பற்றுக் கொண்ட கனகவிராயர் முதலிரு கலீபாக்களைச் சிறப்பாகவே தம் காப்பியத்தில் படைத்துக் காட்டுகிறார். ஆனால் உதுமா னாரின் பாத்திரப் படைப்பில் சிறிது மாற்றங் கொண்டிருப்பது போலத் தோன்றுகிறது.

**வாசாம கோசரஞ்சீர் வண்மை பொறையறிவு**
**வாசார நீதியனைத்தும் பெறுமுதுமான் (902)**

வேதாம்பர் நபிபெருமான் வாழ்ந்த காலத்தில் பள்ளியில் குத்துபா ஓதிய தொழும்படியின் மீது ஏறிநின்று குத்துபா ஓதினார். உலகம் போற்றும் முகம்மதுர்றசூல் அவர்களை ஒத்த நிலைபெற்றது போல் அப்படியிலிருந்து குத்துபா ஓதுவது தவறு எனத் தடுத்தனர் இறையன்பர்கள். அதற்கு உதுமான், பூவிலிருந்து உரைத்தாற் பூமியுள்ளார் நம்மவரை நாவினெடுத் தோதார்; நம்மார்க்கந் தாழ்ந்துபோம் (904) என்று உரைத்தார்.

சகுபிகள், ‘நபிக்கிவர்தாம் வஞ்சஞ்செய வந்தவரென்று’, நினைத்தனர் (906). இப்படியிருக்கும்போது ‘முன்னாளெழினபி துரத்துந் தீமைமன்னிய மறுவான்தன்னை மந்திரியாக்க உன்னிப் பண்ணுமக் கொடியனுக்கோர் பத்திரமெழுதித் தூதன் வசம் அனுப்பினார் உதுமான் (907). துட்டனான மறுவான் தொண்டன் போல வந்து பணிந்து இருந்தது கண்டு சகுபிமார்கள் திகைத்தார்கள் (910). நாற்படைகளின் தலைவ னாகவும் ஆக்கினார். உமையா குலத்தவனான மறுவானை இளவரசுமாக்கினார் (913). ஒருநாள் பள்ளியில் கூடிய சகுபிமார்களிடம் உதுமான் கூறினார் ‘என்னுயிர் மறுவானுக் கிங்கு என் அரசு ஈந்தால் பின்னர் மன்னுயிரனைத்துங் காப்பான். அவனையே அரசனாக்குங்கள்’, என்று மொழிந்தது கேட்டு அனைவரும் கோபங் கொண்டனர் (915). இஃதறிந்த ‘மிசுறு’ அரசர்களான மகமது மாசீம், அபூபக்கர் ஆகியோர் இது தவறு என ஓலை அனுப்பினர்.

மறுவானை உதுமான் ஏற்றுக் கொள்ளக் காரணமாகத் தொனிப்பது இரண்டு காரணங்களே. ஒன்று அவன் உதுமானா ரின் குலமான உமையாகுலத்தான் மற்றொன்று உதுமானுக்கு

அரசுப் பதவி கொடுக்க எடுத்து மொழிந்த மாவியாவுக்கு உகந்தவன் அவன் என்பது. இது உதுமானாரின் பாத்திரப் படைப்பில் ஒரு கறையாகவே காணப்படுகின்றது.

நாட்டில் மழை குறைந்து பஞ்சமேற்பட்டது. அறிவும் நாணமும் அழிந்து மக்கள் இரந்து திரிந்தனர். பள்ளியின் குருவி போலிருந்த ஒரு பாவி ஆடுகள் பல வளர்த்து வந்தான். அவன் நபி நாதருக்கு இணை வைத்தவன். அவனிடமிருந்து ஆடுகளை வாங்கி மக்களுக்கு ஈயத்தலைப்பட்டார் உதுமான் மன்னர். 'ஆஷிங்' குலத்தார் மிசுறுக்கு மீண்டும் கடிதமனுப் பினர் (945). அவர்கள் காலம் பார்த்திருந்தனர்.

இவ்வாறிருக்கும்போது, உதுமானார் மிசுறு மன்னராம் முகம்மதபூபக்கருக்கு 'ஷாம்' நகர் சென்று அங்கரசராக வாழ்க என்ற நற்செய்தியைக் கடிதமாக எழுதச் சொன்னார் மறுவானிடம். தீயனாம் மறுவான் சூழ்ச்சி செய்தான். இரு கடிதங்கள் எழுதினான். ஒன்று அரசர் கூறியது போலவும், மற்றொன்று 'ஷாம்' நகர மக்களுக்கு இரு பொருள் படவும் எழுதினான். அழகிய வேந்தனாக அபூபக்கரை ஏற்றுக் கொள்க என்றும் மற்றொரு பொருளில் 'பூமியினிடத்து உயிரொடு நிலையா வகைப்படுத்துக' எனும் இரு பொருள்படும் படிச் சிலேடையாக எழுதினான் (952). அரசர் அவனை நம்பிய தால் கவனிக்காமல் முத்திரையிட்டார். மிசுறில் இரண்டு கடிதங்களும் அரசர் தம் கையிலகப்பட்டன. சதிசெய்து கொல்ல முனைகிறார் உதுமானெனும் வஞ்சம் ஏற்பட்டுப் படைகளோடு மதீனம் வந்தனர்.

**சதி செய் நினைந்தா ராகில்தந்தையர் தாயரேனும்**
**வதையுற மடித்தல் தானே வாகுறு நீதி மன்னோ (973)**

என்றனர்.

**தாயென் விருந்து காக்குந் தகுதியே மன்னர்க் காகும்**
**ஆயதன் மையினார் நீதி வரம்பகன் றொழுகு வாரேன்**
**மேயதென் கொல்வ தேமே லெனமனந் தேறி னார்கள்**
**(982)**

கனவு கண்ட உதுமானார் தீமை விளையும் என உணர்ந் தார். ஆஷிம் குலத்தார் படையுடன் வந்ததறிந்து அலியாருக்கு ஆளனுப்பினார். அலியார் தன் மக்களை உதுமானாரின் வாயிலைக் காக்க இறுத்தினார். வெகுண்டு வந்த ஆஷிம் குலத்து வீரர்கள் 'பின் வாயில்' வழியாக வந்து உதுமானா

ரைக் கொன்றார்கள் (1006). றசூலின் 'உரைக்கும், வேதத்துக்கும்' புறம்பாக நடந்தீரென உதுமானை இகழ்ந்தனர். உதுமானாரின் சடலத்தை அடக்காமல் ஏழு நாட்கள் காத்தனர். அலியாரின் வேண்டுகோளுக்கு இணங்கி அடக்கம் செய்யச் சம்மதித்தனர்.

வேதாம்பர் நபி பெருமானின் இறையன்பில் தோய்ந்திருந்த சகுபிமார்கள் அவருக்கு இணை வைப்பதை வெறுத்தனர். அவர் விலக்கியவற்றை ஏற்க மறுத்தனர். இவற்றைக் கருதாத உதுமானாரை அவர்கள் வெறுக்க இதுவே காரணம். தமது உமையாகுலத்தைச் சார்ந்திருந்ததும் உதுமானாரின் பண்பில் ஏற்பட்ட கலங்கமாகும். இவற்றோடு தீயன் மறுவானின் சூழ்ச்சியும் சேர்ந்து அவர்தம் வீழ்ச்சிக்கும் வழிகோலின. இதனைத் தெளிவாகக் கனகவிராயர் எடுத்துக் காட்டுகிறார். ஒரு நல்லியல்புடைய பண்பாளர் சிறிது சிறிதாகத் தன் செயல்பாட்டால் வீழ்ச்சியடைந்த நிலையினை இப்பாத்திரத்தின் வழியாக விளக்குகிறார் கனகவிராயர். உதுமானாரின் பாத்திரப் படைப்பில் கவிராயர் சில குறிப்புகளை உள்ளடக்கியிருக்கிறார் என்பதற்குக் கடவுள் வாழ்த்துப் படலம் ஒரு சான்றாகும். நபி பெருமான், அபூபக்கர், உமறுகத்தாப் ஆகியோரின் பாதங்களை வழுத்துவோம் என்றவர் "உதுமானைச் சொல்வாம்", (10) என்று பாடியுள்ளது இதனால் தானோ? சதி செய்து பதவியை அபகரித்தவர்கள் எனும் அவதூறை ஷியா பிரிவினர் கூறுவதற்கு ஏதுவாக உதுமானாரின் பாத்திரப் படைப்பு அமைந்துள்ளதும் குறிப்பிடத்தக்கதாகும்.

## அலியார்

நபித் தோழர்களில் வீரம் நிறைந்தவராக அலியார் குறிப்பிடப்படுகின்றார். உதுமானாருக்கு அடுத்த ஆட்சியாளராக அலி (ரலி) அவர்களைத் தேர்ந்தெடுத்தனர். இவர் பல சிறப்புக்களின் உறைவிடமானவர். பெருமானாரை வளர்த்த பாத்திமா எனும் தாயாரின் புதல்வர் இவர். நபி பெருமானின் பெரிய தந்தையாரான அபுத்தாலிபின் அருமை மைந்தரான அலியார் நபியவர்களின் அரும்புதல்வி பாத்திமாவை மணந்து நாயகத்தின் மருமகரானவர். இலக்கியங்களில் 'புலி அலி'யார் என்றே குறிப்பிடப்படுகிறார்.

இவர் அரசேற்றதும் ஓடி ஒளிந்த மறுவானும், மாவியாவும், அவர் தம் மகன் எசீதும் ஒன்று சேர்ந்தனர். ஹாஷிம் குலத்த

வரே உதுமாரின் கொலைக்குக் காரணமென்றும் போர் தொடுத்து அரசாட்சியைக் கைப்பற்றலாம் என்றும் அலியா ருடன் போர்புரிய மாவியாவைத் தூண்டினான் மறுவான்.

அலியாரின் காலத்திலும் பஞ்சமேற்பட்டது. மாவியா மதீனத்துக்குப் பொருள்கள் செல்லும் வழிகளை அடைத்தார். இது பற்றி அரசரிடம் கூறி அவருடன் பொருதக் கூறியபோது, மாவியாவாகப் போருக்கு வரும்வரை பொறுமையாக இருக்கு மாறு கூறிய 'பொறுமை'யாளரைக் காட்டுகிறார் கவிராயர் (1066). பைத்துல்மாலைத் (களஞ்சியம்) திறந்து கொடுத்துப் பஞ்சம் மாற்றினார் 'கொடையாளர்' அலியார் (1073).

மதீன மாநகரில் புகுந்து அழிவு ஏற்படுத்துகிறார் மாவியா என்பதைக் கேட்ட அலியார் அதிகக் கோபத்தினரானார்' அவதூறு பரப்பும் மாவியவுடன் பொருதி வெற்றி பெற்றார் 'வீரர்' அலியார்.

**காட்டினா ரோரொலி கழறினார் பாவிகாள்**
**போட்டுநும் மாயுதம் போமினிப் போதெனுங்**
**கோட்டுநும் முயிருயக் கோலமா வெனமனங்**
**கோட்டினார் மாவியா குறுகினா ரலிமுனம் (1129)**

வெற்றி பெற்ற, அலியார் 'மதினந்தன்னில் சேனைகளோடும் வந்து புகழ்நபி கபுறிற் பாத்திஹாவினைப் புகன்றார்' (1140). மீண்டும் மாவியா தொல்லை கொடுத்தார். நூகுநபியவர் களின் மிக்க எடையுடைய தண்டப்படையினை எடுத்துத் தனது அறிவுமிக்க துல்துல் குதிரையில் ஏறிச்சென்று துட்டரின் சேனை யினைச் சிதைத்தார் அலி.

பெருந்தன்மையாளர் அலி என்ற புகழ் அலியாரைச் சாரும். இரக்க குணமும் உடையவரிவர். உமறுகத்தாபின் காலத்தில் நவசேருவானின் இரு பெண் மக்களையும் தண்டிக்குமாறு உமறு கூறியபோது பழிவந்து சேருமென்று கூறித் தடுத்து அவர்களை உம்முசல்மா அவர்களிடம் விட்டு மறை பயிற்றுவித்தார். அவர்களில் ஒருத்தியான சகருவானைத் தனது மகனான உசைனாருக்கு மணமுடித்த இரக்க சிந்தனையாளர் அலியார். இப்பெருந்தன்மையுடைய அலியார் தம்மோடு பொருதியவர் களை,

**சிந்தனை கொள்ளன்முன் சென்ற தன்மையா**
**யுய்ந்துபோய் நின்னக ருறைக வென்றனர் (1170)**

'வேதத்து உத்தமரலியார்' மாவியாவின் படைகளை வென்று நல்லாட்சியை நிலைநாட்டினார்.

'பாவத்தின் சுவடுகாட்டாப் பண்பினர் மருகரான வேதத்திற் சிறந்த அலி', உமறு காலத்திலேயே கைசர் போரில் வெற்றி பெற்றார் (396) என்றெல்லாம் வீரர் அலியாரின் புகழைப் பாடுகின்றார் கவிராயர். எதிரி மன்னனான நவசேருவானாலேயே புகழப்பட்டது அலிப்புலியின் வீரம் (424). 'அருஷினில் வேங்கை' என்றும் அலியார் புகழப்படுகின்றார். உதுமானை வதைத்து ஏழு நாட்கள் அவரை அடக்காது இட்டு வைத்தவர்கள் அலியார் கூறியதால் அவரது உடலை ஒப்படைத்தனர். அலியாரின் வாக்குக்கு அவர்கள் அவ்வளவு மதிப்பளித்தனர் என அறிகிறோம் (1018).

தீய ஆவிகளை, மறுவானின் மந்திரவாதிகள் ஏவிவிட்ட போது, 'பேய்கள் வாளலிதமை நெருங்கற்கு அஞ்சித் திரும்பி ஓடின' (1313). கெந்துப்பீர் எனுங் கொடியவனை அலியாரைக் கொன்றுவர மாவியா ஏவினார். அவன் வந்ததனைத் துல்துல் குதிரை காட்டிக் கொடுத்ததால் அலியார் அவனை விரட்டினார். சூன்யக்கிழவி ஒருத்தியால் தூண்டிவிடப்பட்ட அலியாரின் பணியாளன் ஒருவன், அவரைக் கொல்லத் திட்டமிட்டிருந்தான். பஜருத் தொழச் சென்று சுஜூதுச் செய்திருந்த அலியாரை அவன் குத்தினான். குத்திவிட்டோடிய அவன் குருடனானான். அவனைப் பிடித்துத் தண்டிக்க முனைந்த சகுபிமார்களிடம், 'இறைவனால் கொடுக்கப்பட்டது இது, அவனை ஒன்றும் செய்யாது விட்டுவிடுவீர்' எனப் பகன்ற பெருந்தன்மையாளர் அலியார்.

அலியாரின் பாத்திரப் படைப்பை மிக நுணுக்கமாகச் சிறப்பித்துள்ளார் கனகவிராயர். ஷியாபிரிவினர் அலியாருக்கு முக்கியத்துவம் கொடுப்பவர்கள். ஷியாபிரிவின் கொள்கையில் சிறிது நாட்டமுடையவரான கனகவிராயர் தன் முயற்சியில் வெற்றி பெற்றுள்ளார்.

### அசனார்

நபி பெருமானாரின் மகள் பாத்திமா (ரலி) அவர்களின் பெருமைமிக்க மக்களில் ஒருவர் அசனார். அலியாரின் மரணத்தின் பின்னர் அரசாட்சி ஏற்றார் இவர்.

**வஞ்சக முதலாங் கொடுந்தொழி லின்றி**
**மறையொடு மறைநெறிப் பயிர்க**

**ளெஞ்சிலா தோங்க வருண்மழை பொழிந்து**
**மெட்டிரு கோணத்து மிருக்கும் (1411)**

என அசனார் அரசோச்சி இருந்ததனைக் கவிராயர் விளக்கு கிறார்.

'மறைப்பொருள் தெரி புலவரசன்' அவர்களின் ஆட்சியிலே அரபு நாடுகள் செழித்தன. மாவியா திறை செலுத்தாதது அறிந்து இவர் படையெடுத்த வீரம் போற்றற்குரியது. மாவியா அடி வீழ்ந்து பணிந்தபோது 'அஞ்சற்க' எனக் கூறி இருக்கையில் இருத்திய அசனாரின் இரக்க குணத்தைக் காட்டுகிறார் கவிராயர் (1426). அம்மாவியா,

**நந்நபி மகிழும்பேர ரிவர்நிகர் நமக்கு வேறோர்**
**மன்னவர் கிடையாரென்றும் வாழ்கவிப் புவிமே லின்னார்**

என்று அசனாரைப் புகழ்ந்தார் (1441). மறுவான் சூழ்ச்சி செய்தான். எசீது வஞ்சங் கொண்டான்.

தன் தந்தையாரின் வேண்டுகோளுக்கிணங்க 'தம்பியரொரு பதினாறு புரவலர்க்கு இறாக், ஏமன், மகரிபு முதலாம் திருவறா நகர்க்கிறைமைதந்தனுப்பினர்' (1519). நபியவர் களைக் கனவிற் கண்டு தன் இறுதிக்காலம் வந்ததறிந்தனர். சாம், திமிசு அரசர்களின் கொட்டத்தை அழிக்க எண்ணங் கொண்டு படையுடன் சென்றனர்; வென்றனர். அருந்திறற் புலியசன் நகரடைந்து பெருந்தானம் செய்தனர் (1553).

ஒரு நாள் மறபினக்குடிகள் சென்று தங்கள் பயிர்களைக் காட்டு விலங்குகள் அழிக்கின்றன, அவற்றை வேட்டையாடி எங்களைக் காக்க வேண்டுமென்றனர். வேட்டையாடித் தாகத் துடன் வந்து பணியாளரிடம் நீர் கேட்டார். எசீதின் சூழ்ச்சியிற்பட்ட 'விருத்தை' பானத்தில் நஞ்சு கலந்து அளித் தாள். நஞ்சின் வலிமையால் மாய்ந்தார். மாற்றவர்க்கு இடியேறன்ன மன்னவ ரசனார். வீரர், கொடையாளி, அன்புளங்கொண்டவர், வேதம்புரி விற்பன்னர் என்றெல்லாம் அசனாரின் பாத்திரத்தைச் சிறப்புச் செய்துள்ளார் கவிராயர்.

## உசைனார்

அசனாரின் இளவலான உசைன் (ரலி) பேரழகுடைய பெருந்தன்மையாளர். மன்னு சீரினார் உசைனாருக்கு மக்கள் அரசுப்பட்டம் சூட்டினார். நல்லரசு புரியும் காலை எசீது

ஆட்சி கவரத் திட்டமிட்டான். மதீனமுதலான நகர்களெலாம் தனக்குச் சொந்தமெனக் கடிதமனுப்பினான் எசீது. உசைனாரை ஒழிக்கத் திட்டமிட்டான். 'இறாக்கு' மன்னர் எழுதிய ஒரு கடிதத்தில் அங்கு வந்தால் இந்நகராட்சியையும் அளிப்போமென்று குறிப்பிடப்பட்டிருந்தது. உசைனார் அங்குச் செல்லும் நேரம் வழியில் அவரை மடக்கிக் கொல்லலாம் என மறுவான் எசீதுக்கு உத்தி கூறினான். எசீது அவனது நண்பர்களைக் கூட்டினான். இதனை மக்கா செல்லும் 'அப்பாசு' வழியாக அறிந்த உசைனார் நபிபெருமானின் கபுறில் நின்றழுதார். அன்று நபியவர்களைக் கனவில் கண்டார். கனவில்;

**தம்மைமா வுவப்பி னோடுந் தழுவவு மிறசூ லுல்லா**
**வெம்முடை யுயிரே தேனே யெழிலுறு முசைனே யிந்தச்**
**செம்மையி றுன்ப மியாருந் தீர்க்கரி துலகி லாதி**
**தம்மரு ணிக்குண் டாஞ்சா லவும்விரைந் தேகு கென்று**
**(1703)**

கூறக்கேட்டார். பின்னர் றசூலின் கபுறையடைந்து விடையாது றசூலே எமக்கு எனக் கேட்டபோது, இன்றே மதீனம் விட்டுச் செல்க எனும் அசரீரி கேட்டு, எழுபத்திரண்டு பேருடன் மதீனம் விட்டுச் சென்றார். கறுபா வந்தனர். உமையாகுலத்தோர் தம் கேளான எசீதுக்கு ஓலைவிட்டனர். ஹாஷிங் குலத்தாரின் உதவி வராவண்ணம் பாதைகளை அடைத்தான் எசீது. கூபா செல்லும் வழியில் வழிப்போக்கர் கூறியதிலிருந்து கூபாவில் எசீதின் படை நிற்பதை அறிந்தார். எசீதின் படையை அப்துல்லா சையாது நடத்தினார். றாகிம் என்பவர் உசைனார் பக்கம் சார்ந்தனர். அசனாரின் மகன் அலிஅக்குபாறை நேரிலனுப்பினால் தீது அகலுமென்று எசீது ஓலையனுப்பினான். உசைனார் மகனிடம் என் செய்வதெனக் கேட்டார். அலிஅக்குபாறு தீனை ஒதுக்கிய அக்கயவனிடம் செல்வதைவிட அவனுடன் பொருது மாய்வது நலம் என்றார். மைந்தன் கூற்றை ஏற்றார் உசைனார். போர் நிகழ்ந்தது. பலரை வெட்டி மாய்த்தனர். காசீம் முதலானோர் கொல்லப் பட்டனர்.

''வேண்டுவ தெவ்வகை என நபியை இரந்து அழுதார்'' உசைனார். பஜரு தொழும் வேளையில் பகைவர் வளைத்துக் கொண்டனர். உசைனாரின் பச்சிளங்குழந்தை நீர் வேட்கையால்

தவித்தது. சகருவான் தவித்தான். உசைனார் கண்ணீர் விட்டார். குழந்தையைக் காட்டி நீர் கேட்டனர், வீரர்கள். எதிரிகள் அக்குழந்தையை அம்பெய்து கொன்றனர். அப்துல்லாவும் தம்பியர் மூவரும் போரில் மடிந்த செய்தி கேட்டு மனமுருகி உடல் சோர்ந்தார் உசைனார் (1878). அசனார் மகன் காசீம் ஷகிதானதறிந்து உசைனார் அழுது புலம்பினார் (1901). அசனாரின் மற்றொரு மகன் அலியக்குபாறும் போரில் ஷகிதானார். உசைனார் புத்திர சோகமடைந்து புலம்பினார். பின்னர் உசைனார் படைபொருதச் சென்று எழுபதினாயிரம் வீரர்களைக் கொன்று அலிப்புலியின் குட்டியாக நின்றார். சிங்கத்தை யானைகள் வளைத்தது போல அசனாரை அப்துல்லா சையாதின் படை வளைத்தது. காயம்பட்டு வீழ்ந்தனர் உசைனார். 'சமறுசாது' என்பவனை உசைனின் தலைகொய்ய அனுப்பினார் சையாது. அவன் உசைனை நெருங்கினான். அவன் வந்த நோக்கறிந்து 'பனிமொழி உசைனார்' என் சிரத்தை வெட்ட நீ அருகனல்லை, சினவுநாய் முலையன் பூனைக்கண்ணனின் செய்வான் என்றார்' (2022). அவ்வாறே நிகழ்ந்தது. பூனைக்கண்ணன் அவரது தலையை வெட்டிச் சென்றான். உசைனாரின் ஏவல் பையன் அவரது அரை ஞாணை எடுக்க வந்தான். உசைனாரின் கையிலறைபட்டுக் கண்ணிழந்தான். இறையேவலால் கறுபலாவில் விண்ணவர் இறங்கினர். உசைனாரின் சடலத்தை எடுத்துச் சென்றனர். உசைனாரின் தலையை ஐங்கியின் கையிலிருந்து சகுதி கைப்பற்றினார். அவரது தலை ஒளிவீசிக் கலிமா புகன்றது. சகுதியும் மனைவியும் இசுலாமானார்கள்.

இறுதியில் உசைனாரின் உருவந்தனைக் கண்ட எசீது மனம் பேதலித்து 'ஏன் எனை வெட்டுகிறாய் உசைனே' எனக்கூறி மாடத்திலிருந்து விழுந்து உயிர்விட்டான்.

உசைனார் அரசுப் படலம், உசைனார் ஷகீதானபடலம் ஆகியவற்றில் போர் நிகழ்ச்சிகளே மிகுதி. பண்புநலனைப் பிரித்தறியும் செயல்பாடுகள் குறைவு. கவிராயர் படைத்துத் தரும் பகுதிகளின்படி உசைனார் 'வீரம் பொருந்தியவர்; இரக்க மனங்கொண்டவர்; றசூல் சொல் மீறாதவர் (அசரீரி); தமரைக் காக்க எண்ணிய தருகண்மையர், ஈகைக்குணம் மிக்கவர், சகருவான் முதலான பெண்கள் விரும்பும், அழகும் பண்புங் கொண்டவர்.' இப்படிப்பட்ட பாத்திரம் அழுது புலம்புவ

கருதலாம். எனினும் அதற்கு ஒரு தலைமை வேண்டுமல்லவா? அப்பதவியை, நபி பெருமானது காலத்தில் நல்லவராயிருந்து பின் பாவத்தை வலிந்தேற்று வழி நடத்திய மாவியாவும் அவர் தம், புதல்வனாம் எசீதும் பெறுகின்றனர். இதற்குத் தூண்டு கோலாக அமைபவன் மறுவான் என்பவனாவான். சீறா முதலான காப்பியங்களில் அறியாமைக்கும் மெய்யறிவுக்கும் ஏற்பட்ட போராட்டம் உணர்த்தப்பட்டது. எதிர்மைப் பாத்திரங்கள் 'அறியாமை' யாம் புறச்சமயம் சார்ந்தவராக அமைந்தனர். ஆனால் கனகாபிஷேக மாலையில் குலப்பகையே போராட்டக் காரணமாயமைகிறது.

## மாவியா

நபித் தோழர்களில் ஒருவராயிருந்தவர் மாவியா. நபியவர்களிடம் ஜிபுறயேல் அவர்தம் பேரர்களுக்கு ஏற்படப் போகும் துர்மரணங்கள் பற்றிக் கூறியதறிந்து அவர்கள் வருந்திய காலை இறையன்பர்களோடு மாவியாவும் ஆறுதல் கூறச்சென்றார். அப்போது 'யார் உங்கள் பேரருக்கு எதிரியாவர்?' எனக் கேட்கிறார் மாவியா. 'உமது புதல்வன் தான்', என்றார் அண்ணல். இது கேட்டு வருந்திப் புலம்பும் மாவியா தனக்குக் குழந்தைகளே பிறக்க வேண்டாமெனக் கருதி மனைவியைத் 'தலாக்' (மணமுறிவு) கொடுத்து விடுகின்றார். இத்தியாக மனப்பான்மையை மெச்சிய நபிபெருமான் அவரை ஷாம் நகர ஆட்சியாளராக நியமித்தார். இப்படித் தியாக உணர்வு கொண்ட இசுலாத்தின் கொள்கைகளில் பற்றுக் கொண்ட மாவியாவின் பண்புநலன் வீழ்ச்சி படிப்படியாக இக்காப்பியத்தில் காட்டப்படுகின்றது. மாவியாவின் நல்லெண்ணங்கள் திசை திருப்பப்பட்டன. மறுவான் எனும் மாபாவியால். இறையன்பில் குறைவில்லாத நபித் தோழராம் மாவியாவை விமர்சிப்பது கூடாது என்பது ஸுன்னிப் பிரிவினரின் (பொது நோக்குடையோர்) கருத்தாகும். இக்கருத்துக்கு மூலக்காரணம் மாவியாவின் செயல்பாட்டில் 'குலப்' பிரச்சினையைத் தவிர வேறு தீய நோக்கம் காணப்படாதது தான்.

இப்படிப்பட்ட மாவியா ஒருநாள் சிறு நீர் கழித்துச் சுத்தப் படுத்த மண்கட்டி கிடைக்காது மண் சுவரிடுவை நாடினார். தேளொன்று கொட்டியது. அவ்விசம் நீங்க ஒரு பெண்ணைப் புணருமாறு மருத்துவர் கூறினர். இதற்காகப் பேறு நின்று போன ஒரு கிழவியை மணந்தார். இறைவனின் நாட்டத்தால்

அவள் எசீதைப் பெற்றெடுத்தாள். இக்காப்பியத்தின் உண்மை யான எதிர்ப்பண்பு எசீதின் பிறப்பிலிருந்து தோன்றுகிறது.

றசூல் கூறியது கேட்ட மாவியா, 'கன்ம சண்டாளியானே னென்று மனங்கவலித்தார்' (168). இதன்பின் வேண்டிய செய்து 'ஷாம்' நகர் ஆண்டு வந்தார். நபியவர்களது காலத் தின் பின்னர் அபூபக்கர், உமறு கத்தாபு ஆகியவர்களின் ஆட்சியை ஏற்று நடந்து வந்தார். உமறு கத்தாபின் மறைவுக் குப் பின் தமது உமையாகுலத்தவரை அரசராக்கச் சூழ்ச்சி செய்தார். பின்னர் நபித் தோழரான உதுமானது பெயரை அவரே முன் மொழிகின்றார் (853). திமிசு நகரப் பதியாக்கப் பட்டார் மாவியா. பலநூறு பள்ளிகள் கட்டினார். 'குத்துபாப் பள்ளி கட்டக் கோன்மிகு நிதியமீந்தார்' (892) இப்படி இறை வழியில் ஈடுபட்டிருந்த மாவியாவின் வீழ்ச்சி மறுவான் எனுந் தீயனை ஊர்த்தலைவனாக்கியதில் தொடங்குகிறது. அவன், மாவியாவின் குலத்தைச் சார்ந்தவன், மறுவானின் தூண்டு தலால் அலியாரின் தலைமையை ஏற்க மறுக்கிறார் அவர். அலியாரைக் கொலை செய்யவும் திட்டமிட்டார் (1044), 'மாவியா வென்னும் பாவவுள்ளர்' (1048) மதீனம் கொள்ளை யிடக் கூறுகிறார். 'துட்ட மாவியா' (1074) மதீன மக்கள் பஞ்சத்தில் துன்புறுமாறு பொருள்கள் வரும் வழியை அடைத்தார். 'மூர்க்கரா மன்னவர் மாபியா' அலியாருடனும், பின்னர் அலியாரின் மக்களுடனும் பொருதுகின்றார்.

இதனால்,

> **பழியெலா மனுவுரு வெடுத்த பாதகர்**
> **இழிவுலா மாவியா வென்னும் பேரினார் (1052)**

என்று கவிராயர் மாவியாவின் வன்னெஞ்சத்தைப் பறை சாற்றுகிறார்.

தன் மகன் எசீது பிறன் மனை நாடியபோது அவன் நோய் தீர்ப்பதற்காக அப்பெண்ணின் கணவனை அழைத்துப் பேரம் பேசிய கொடுமனக்காரராகவும் மாவியா சித்திரிக்கப் பட்டுள்ளார் (1479). அசனாரரசு ஏற்றபின் தன் தாழ்வு எண்ணி மறுகி வீழ்ந்து மடிகிறார்.

நல்ல எண்ணம் கொண்ட இறைநேயர், குலத்தின் மேல் வைத்த பற்றால் கடையனாம் மறுவானின் சொல் கேட்டுச்

சுய அறிவு மழுங்கித் தீயனாம் தம் புதல்வனின் தீச்செயல் களுக்கு வழிப்பட்டு மடிந்து போகிறார். இப்பாத்திரப் படைப்பில் கவிராயரின் புலமைத்திறன் திறம்பட வெளிப்பட்டு நிற்கிறது.

## எசீது

'தேள் கொடுக்கின் விஷத்தில் பிறந்தவன்' எனச் சபிக்கப் பட்டவன். தீமையே உருவாகக் கொண்டவன், பெண்பித்தன். பேராசை கொண்டவன். தீன் வழியினின்று நீங்கியவன் என்றெல்லாம் இவனை இக்காப்பியத்தில் காணுகிறோம். நவசேருவானின் மகளான சகருவானின் சுயம்வரத்தில் அவள் உசைனாரை மணந்தபோது அவர் மீது வஞ்சம் கொள்கிறான். பின்னர் அசனார் அரசராயிருந்த காலத்து அவரிடம் தோற்று, "திமிசு ஷாமுக்கரசரா மாவியாவினெம்மையுந் தீய பாவி வெசீது தானும் புத்திவந்தவன் போலப் பொய்மையாங் கோலங் காட்டினான்'' (1446). மதீனத்தில் மாடத்தில் கண்ட பிறன் மனைவி ஒருத்தி மீது காமங் கொண்டான். அப்பாவி, 'விண் டனன் றனக்குத்தானே கூடிலிவ்வியன் கொண்டாளை யண்டி யாசை மொழி பேசிக் கூடிடவேண்டும்' (1448) எனக் கருதி னான். இறுதியில் கணவனால் மணமுறிவு கொடுக்கப்பட்ட அப்பெண் உசைனாரை மணப்பதாகக் கூறி மணந்தாள். எசீதின் பகைமை மேலும் கூடியது (1526).

அவன் தந்தை மாவியா மடிந்தபின் ஆட்சிப் பொறுப் பேற்றான். உசைனைக் கொல்ல 'அரசமாகும்பட்டம் வந்து சேர்ந்தது' என மகிழ்ந்தான் என்கிறார் கவிராயர் (1582). மந்திரி மறுவானின் தீய வழிகாட்டலும் இணைந்து எசீதின் மனதைக் கொடியதாக்குகிறது.

**உசைனைக் கொன்று சகர்வானை வருந்தக் காண்**
**பலென்றான் (1664)**

உசைனின் தலையினை வெட்டி வரச் செய்தான். அவரைச் சார்ந்த பெண்டிரைக் கைது செய்து சிறையிலடைத்தான். 'வேத நுண் பொருளுணரா' விழலன் எசீது (1754) உசைனார் மீது வஞ்சம் கொண்டது குலப்பற்றாலோ ஆட்சிப் பற்றாலோ அல்ல. தான் விரும்பிய பெண்களெல்லாம் உசைனை மணந் தனர் என்பதுதான். பெண்வழிப் பகைதான் இவனது வீழ்ச் சிக்குக் காரணமாகின்றது. இதன் காரணமாக, 'மதீனத்தாட்

சிக்குத் தானே உரியவன் எனப்' பொய்க் கடிதம் எழுதிக் கொண்டு உசைனார் எழுதித் தந்த பத்திரம் எனக் கூறிய பொய்யனாகிறான் (1786). அசன் மகனான செய்னுலாபிதீனை அழைத்து உசைனாரின் தலையைக் காட்டி ,நின்னுடைத்தாதை யின் சீரிசையெங்கே வலியுமெங்கே, பெரும்படை யாதியெங்கே' சொல்லாயென்று நகைபுரிகின்றான் கொடுமனப்பாவி (2263). அப்போது பாங்குச் சத்தம் கேட்டது. எசீது சகாதத்துக்கலிமா சொன்னான். முகம்மதரின் உற்றாரை அழித்த உனக்கு அவர் தம் சலவாத்து மொழிதல் நாணமில்லையோ,' என ஜெயினுலா புதீனால் இகழப்பட்டான். இறுதியில் உசைனார் வெட்ட வருவதுபோலக் கண்டு மனம் பேதலித்து 'வெட்டாதே உசைனே என்று' கூறி மாடத்திலிருந்து விழுந்து மரக்கொம்பில் கழுவேற்றியது போலக் கிழிபட்டு இறந்தான்.

எதிர்மைப் பண்பாகக் காட்டப்பட்ட எசீதின் பாத்திரப் படைப்பில் அவனது கொடுமனமும், பெண்ணாசை, மண்ணா சையால் செய்யும் வஞ்சமும் வெளிப்பட்டு நிற்கக்காணுகிறோம். பிறன்மனை நாடிய கொடியனானது, எசீது எனும் எதிர்மைப் பண்பு கழுவேற்றப்பட்ட நிலையில் மடிவது, 'தீமை' இறுதியில் அழியும் என்ற தமிழ்க் காப்பிய மரபினுக்கும் ஒத்தமைகிறது.

## மறுவான்

உமையாகுலத்தவனான மறுவான் நபித்தோழரான அபூபக்கரின் மகனுடன் உடன்று பொய் வழக்குத் தொடங்கிய தால் நபி பெருமானால் தண்டிக்கப்பட்டு நாடு கடத்தப் பட்டவன். அபூபக்கர் காலத்தில் அவரிடம் மன்னிக்குமாறு கேட்டபோது நபியவர்களால் விலக்கப்பட்டவன் என மீண்டும் விலக்கப்பட்டான். உமறுகத்தாபின் மறைவுக்குப் பிறகு உதுமானார் ஆட்சி ஏற்பட்டது. மாவியாவினால் நகர்த் தலைவனாக்கப்பட்டான். உதுமானாரின் அமைச்சனாகிச் சூழ்ச்சி செய்து அவரது சிறப்புக்குக் காரணமாகினான். அலியார் அரசேற்றபோது அவன் மாவியாவின் மந்திரியாகிச் சூழ்ச்சிகளின் கூடாரமாகிறான். அலியாரின் கொலை, அசன், உசைனாரின் இறப்பு அனைத்துக்குமே திட்டமிட்டுக் கொடுத் தவன் மறுவான். அலியாரை வதைக்க மந்திரவாதிகள் மூலம் 'வாதை' களை ஏவிவிட்டான். இவ்வாறு தீமைகளின் பிறப்பிட மான மறுவான் இறுதியில் சகுபிமார்களால் தீயிலிடப்பட்டு மடிகின்றான். இவனது எதிர்மைப் பண்புக்கு நேரடியான காரணம் காட்டப்படவில்லையெனினும் அவன் பிறப்பிலேயே

கொடிய மணமுடைய தீயவன் என்பது புலப்படும். தன்னை நாடு கடத்திய நபியவர்களையோ அபூபக்கரையோ அவன் கறுவிய கூற்றாக இக்காப்பியத்தில் கூற்று இல்லை. உதுமான் வதைக்கும் காரணம் கூறப்படவில்லை. தொண்டன் போல உதுமானைச் சார்ந்தவன் அவரையே கொல்லத் திட்டமிட்டான். மாவியாவிடமும் எசீதிடமும் சேர்ந்து அவர்களைத் தீய வழியில் நடத்திச் சென்றவன். 'துட்டன்' என்றும் 'தீன் பயிரை மேயும் காலி' என்றும் கவிராயர் இவனைக் குறிப்பிடுகின்றார். இவை யெல்லாம் 'மறுவானே' இக்காப்பியத்தின் எதிர்மைப் பண்பு டைப் பாத்திரம் என்பதை உறுதி செய்கிறது. இவனது சூத்திரக் கயிறால் ஆட்டுவிக்கப்பட்டவர்களே மாவியாவும், எசீதும். உதுமானாரும் கூட இவனால் ஆட்டுவிக்கப்பட்டவரே .இவனது இறுதி தீயிலானது, தீமையின் அழிவினைக் காட்டுகின்றது. கொடு நெருப்புடைய நரகத்தின் தொடக்கம் இம்மையிலேயே அவனுக்குத் தொடங்கி விடுகிறது எனக் குறிப்பால் உணர்த்தி விடுகிறார் கவிராயர்.

மேலும், கவிராயர் ஸுன்னி, ஷியா பிரிவினரின் பிரிவு நோக்கிற்கு இடைப்பட்ட நிலையில் நின்று கொண்டு இரு பிரிவினரையும் திருப்திப்படுத்த முனைந்துள்ளார் எனத் தோன்றுகிறது. மாவியா குலப்பற்றாலும், எசீது பெண்ணாசை யாலும் எதிர்மைப் பண்பு கொண்டனர். ஆனால் மறுவான் எல்லாத் தீச்செயலுக்கும் தூண்டுகோலாக நின்றான். எனவே பழியனைத்தும் மறுவானையே சாரும் என எண்ணும்படிக் காப்பியப் போக்கைக் கொண்டு சென்றிருப்பது இதனால் போதரும்.

## துணைப் பாத்திரங்கள்

முதன்மைப் பாத்திரங்களும் எதிர்மைப் பாத்திரங்களும் மட்டும் ஒரு காப்பியத்தின் செயற்கூறுக்குப் போதாது. காப்பியக் கதை நிகழ்ச்சிகளை நகர்த்திச் செல்லவும், காப்பியச் சுவையைக் கூட்டவும் துணைப் பாத்திரங்கள் இன்றியமை யாதனவாகும். கனகாபிஷேக மாலையில் பல துணைப் பாத்திரங்கள் பல நோக்கத்துக்காகப் படைக்கப்பட்டுள்ளன. அவற்றில் சிலவற்றை இனிக்காண்போம்.

## நவசேருவான்

புறச்சமயம் சார்ந்த ஒரு மன்னனான நவசேருவான் உமறுகத்தாபின் ஆட்சிக் காலத்தில் திறை செலுத்தமறுத்தான்.

அசமியங்குலத்தைச் சார்ந்த அவனை 'விபூதிதங்குநுதல்' நவசேருவான் (453) எனத் தமிழ் மரபு சார்ந்து இந்து அரசனாக் அறிமுகம் செய்கிறார் கவிராயர். போரில் தோற்று மடிவதற்கு முன்னர் அவனது வீரமெல்லாம் காட்டப்படுகிறது. இவனது பெண் மக்களே பிற்காலத்தில் உசைனாரின் மனைவியான சகருவானும், அபூபக்கரின் மகனது மனைவியான நாசுநூசு என்பவர்கள்.

சேறுவானின் மகனான 'அறுமன்' என்பவன் இசுலாம் ஏற்க மறுத்து மடிந்தான்.

## மகதி

கைசறைவென்ற அலிப்புலி, அரசரின் ஆணைக்கேற்ப அதனை மகதி என்பவருக்கு ஆளுமாறு கொடுத்தார்.

## அபுலூல்

உமறு கத்தாபுக்கு ஓர் அடிமைப் பையனை விற்றவர்' அப்பையன் உருவ வணக்கம் கொண்டதால் உமறு தண்டித்தார். அவன் அவருக்கு எதிரியாகி அவரைக் கொலை செய்தான். கொலைஞனை அறிமுகப்படுத்தியதால் இப்பாத்திரம் சில பாடல்களில் குறிப்பிடப்பட்டாலும் முக்கியத்துவம் பெறு கிறது (779). அலியாரைக் குத்திய ஏவல் பையனின் பெயரும் குறிப்பிடப் படவில்லை.

## காசிம்

அசனாரின் புதல்வர். உசைனாருக்காகப் பொருது மரித்தவர்.

## சறாயீல்

உசைனாருக்கும் குடும்பத்தாருக்கும் ஏற்பட்ட துன்பமறிந்து சகுபிகளை ஒன்று திரட்டி எசீதின் படைகளுடன் பொருது இறைநேயர்களின் மறு ஆட்சிக்கு வழிகோலிய வணிகர், ஹாசீம் குலத்தவரால் அரசராக்கப்பட்டவர். இவர் புரிந்த போர்கள் விரிவாக இக்காப்பியத்தில் பாடப்படுகின்றன. (சறாயீல் உசைனார் ஷகீதை அறிந்த படலம், சறாயீல் அரசுப் படலம், சறாயீல் போர்புரி படலம்). இறைநேசர்; அசன் உசைனார் மீது அன்பு கொண்டவர்.

### தோகாந்துறுக்கி

சறாயீலிடம் அடிமையாயிருந்தவர். சறாயீல் இவருக்கு அடிமைவிடுப்பு விடுத்துப்போருக்கும் தலைமைதாங்கச்செய்தார். விறலில் மிக்க திறம் படைத்தவராகத் துறுக்கி காட்டப்படு கின்றார். இராமாயணப் பாடல்களில் கும்பகர்ணனின் ஆற்றல் விளக்கப்படுதல் போலத் தோகாந்துறுக்கியின் போராற்றல் இக்காப்பியத்தில் பேசப்படுகிறது (2491 முதல் 2496 வரை) எசீதின் படைகளைச் சின்னாபின்னப் படுத்தியதில் துறுக்கியின் பங்குமிகுதியாகும். எனவே முகம்மது கனீபா முதலானோர்,

**உன் வல்லமைக்கிதுவோ பாரெலா நினக்கு**
**வழங்கலு மீடன்றென் றுரைத்தார் (2500)**

பல வெகுமதிகளும் அவருக்கு ஈந்தனர்.

### அப்துல்லாசையாது

உசைனாரைக் கொல்லச் சென்ற எசீதின் படையை நடத்தியவர் இவர். இவரது ஆணையின்படியே உசைனாரின் தலை வெட்டப்பட்டது. தோகாந்துருக்கியினால் இவரது படைகள் சிதைக்கப்பட்ட பின் சகுபிகளால் கை, நாக்கு, முதலானவை வெட்டப்பட்டு மாய்ந்தார் (2596). அவரது உடல் கழுவில் ஏற்றப்பட்டது.

### முகம்மது கனீபா

அலிப்புதல்வர்களில் ஒருவர். உசைனார் மடிந்தபின் அசனாரின் புதல்வரான செயினுலாபிதீன் ஆட்சிப் பொறுப் பேற்கும் மட்டும் அரசுப் பதவி வகித்துச் சகுபிகளின் படையை நடத்தியவர்.

### பெண் பாத்திரங்கள்

அருமை நபியின் அருந்தவப் புதல்வி பாத்திமா (ரலி) அவர் கள் நபிகள் நாயகம் மறைந்தபோது அரற்றிப் புலம்பும் காட்சி யில் சித்திரிக்கப்படுகின்றார். பின்னர் உசைனாரின் கனவில் தோன்றுகின்றார். தனிநிலைப் பாத்திரமாக இவர் அறிமுகப் படுத்தப்படவில்லை.

### சகருவான்

புறச்சமய அரசனான (கைசர்) நவசேருவானின் மகள் களில் ஒருத்தி. 'அறுமன்' என்பவனின் தங்கை. உம்முசல்மா

அவர்களால் மறை பயிற்றுவிக்கப்பட்டு இசுலாத்தைத் தழுவி னாள். சுயம்வரத்தில் உசைனாரைத் தேர்ந்தெடுத்தாள். இதனால் பெண் பித்தனான எசீது உசைனாரின்மீது வஞ்சம் கொண்டான். 'உசைனைக் கொன்று சகருவானின் கண்ணீர் காண்பேன்' என்று எசீது கறுவ உசைனாரின் கொலைக் காரணங்களில் ஒன்றாகவும் இந்நிகழ்ச்சி அமைந்தது. காப்பியக் கதைச் சிக்கல் ஊன்றிச் செயல்படவும் இந்நிகழ்ச்சி பயன்பட்ட தால் முக்கியமான ஓரிடத்தை இப்பாத்திரம் பெறுகிறது. சுயம் வரக் காட்சி, மகளின் வருணனை ஆகிய காப்பியக் கூறுகளை இணைப்பதற்கும் இப்பாத்திரம் கவிராயருக்கு உதவியிருக்கிறது. இதேபோல உசைனாருடன் கறுபலாவில் எதிரிகளால் வளைக் கப்பட்டபோது தம் பாலகனுக்கு நீர் வேட்கை தணிக்க இயலாமல் பட்ட வேதனையை வெளிப்படுத்தி அவலக்காட்சி யின் மெய்ப்பாட்டை மிகுவிக்கிறாள், சகருவான். அக்குழந்தை எதிரிகளின் அம்புகளால் சல்லடையாக்கப்பட்டபோது சகரு வானின் புலம்பல் ஒப்பாரித்தன்மையைக் காட்டுவதாக அமைந்து துன்ப உணர்வை மிகுவிக்கிறது.

நாசுநூசு எனும் இவளது தங்கை அபூபக்கரின் மகனுக்கு மணமுடிக்கப்படுகிறாள்.

## பாத்திமா

இவர் சறாயீல் எனும் வணிகரின் தங்கை. சறாயீல் எசீதின் படையுடன் பொருதச் சென்றபோது அவரது மாளிகையை எதிரிகள் படை வளைத்துக் கொண்டது. அப்போது பெண் களுக்குப் போர் ஆடைகளை அணிவித்துப் போர் செய்து விரட் டியவர் இவர். எண்ணெயைக் கொதிக்க வைத்து ஊற்றி விரட்டினார் எனக் கவிராயர் பாடிய வீரப் பெண்மணி.

## அப்துல்லா என்பவரின் மனைவி

இப்பெண்ணின் பெயர் குறிப்பிடப்படவில்லை. இவளது அழகில் மயங்கித் தான் எசீது காமநோய் கொண்டான். எசீதின் தந்தையின் வேண்டுகோளுக்கிணங்கி அப்துல்லா இவளை மணவிடுப்பு (தலாக்) செய்தான். ஆனால் அழகியான அப்பெண் உசைனாரை மணக்க விரும்பியதால் உசைனாருக்கு மணமுடித்தனர். இதையறிந்த எசீது மீண்டும் உசைனார் மீது வஞ்சம் கொண்டான். எதிரியின் வஞ்சம் உச்ச நிலை அடையக் காரணமாகவும், எசீதின் பிறன்மனை நயந்த கயமையை வெளிப்படுத்தவும் இப்பாத்திரம் படைக்கப்பட்டுள்ளது.

## கிழவிகள் மூவர்

'விருத்தை' என்று கவிராயரால் குறிக்கப்படுபவர் மூவர், இக்காப்பியத்தில் உள்ளனர். மாவியா மணந்த பிள்ளைப் பேறு நின்றுபோன விருத்தை **எசீதின் தாயாளாள்**. மறுவான், எசீது ஆகியோரால் **அலியாரை** வதை செய்ய அனுப்பப்பட்ட **சூன்யக் கிழவி** மற்றொருத்தி. இவள் அழகிய பெண்களை அழைத்துச் சென்று மதீனத்தில் அலியாரின் ஏவல் பையனை மயக்கி அலியாரைக் கொலை செய்ய ஏவிய மூதேவி, 'ஆலமோர் விருத்தை ரூபமாகி வந்தது' *(1381)* என்று கவிராயரால் குறிப்பிடப்படுகிறாள்.

அசனார் கொலைப் படலத்தில், வேட்டைக்குச் சென்று நீர்வேட்கையோடு திரும்பிய அசனாருக்குப் **பானக்கம் தயாரித்து விசம் கலந்து** கொடுத்துக் கொன்றவள் மூன்றாவது விருத்தை *(1626)*.

வரலாற்றின் முக்கியமான பாத்திரங்கள் இக்காப்பியத்தில் படைக்கப்பட்டுள்ளன. சில பாத்திரங்கள் கற்பனையாகப் படைக்கப்பட்டவையாகலாம். ஆயினும் இப்பாத்திரங்கள் மையக்கதையோடு தொடர்புடையவர்களேயாகும்.

# உவமை நலன்களும் இலக்கியக் கூறுகளும்

கவிஞனின் இலக்கியம் எனும் பேராற்றில் வந்து கலக்கும் சிற்றாறாக 'உவமை'யணியைக் கூறலாம். இலக்கியச் சிறப்பை மிகுவிக்க இவ்வொப்புமை உத்தியானது இன்றியமையாதது ஆகும். இதனாலேயே தமிழின் தலையாய இலக்கண நூலாம் தொல்காப்பியம் 'உவமையியல்' என்ற தனி இயலையே கொண்டிலங்குகிறது. உவமை இலக்கிய அணிகளுக்கெல்லாம் தலையாயது. **உவமைப் பயன்பாட்டைக் கொண்டு கவிஞனின் உலகியல் அனுபவம், இலக்கியத் தேர்ச்சி, மொழிநடைச்சிறப்பு, கற்பனை வளம், உணர்வு வெளிப்பாட்டுத்திறன் கருத்துப் புலப்பாட்டுத் திறன் ஆகியவற்றைக் கணித்துவிடலாம்.** கவிஞன், சில பாத்திரங்களுக்குப் பயன்படுத்திடும் உவமை உருவகங்களைக் கொண்டே அப்பாத்திரத்தின் பண்பை அறியுமாறு செய்துவிடும் வெற்றி பொருந்தியவன். சிலவேளைகளில் கவிஞன் கருத்துப் புலப்பாட்டுக்காகக் கற்பவனுக்கும் புரிகின்ற எளிய உவமை உருவகங்களைப் பயன்படுத்திவிடலாம். இதனால் சில உவமைகள் எளிய அமைப்பில் திகழ்கின்றன. பழகு தமிழ்க் காப்பியங்களில் உவமையழகு தனிச்சிறப்புடன் அணி கொண்டிருக்கக் காண்கிறோம். இசுலாமியக் காப்பியமான சீறாப்புராணத்தில் தொடருக்குத் தொடர் உவமை மிகுந்து விரவிக் கிடப்பதாகக் கூறுவர். கனகாபிஷேக மாலையில் உவமையைப் பல நிலைகளில் பயன்படுத்திக் காப்பிய இலக்கியச் சுவையைக் கூட்டியுள்ளார் கனகவிராயர். கனகவிராயர் உவமையை மூன்று அமைப்புகளில் பயன்படுத்தியுள்ளார். 1) உவமைத் தொடர்களை இலக்கிய நயத்திற்காகப் பயன்படுத்தியது. 2) பழமொழித் தொடர்களை உவமையாக்கிக் கருத்துப் புலப்பாடு செய்தல். 3) தனது புரவலரான கனககொந்தாலகானின் புகழை உவமையாக்கித் தன் நன்றிக்கடனை வெளிக்காட்டியுள்ளது. சில உவமைகள் திரும்பத் திரும்பப் பயன்படுத்தப்

பட்டுள்ளன. இவ்வாறமைக்கின்ற முறையானது எல்லாத் தமிழ்ப் புலவர்களின் காப்பியங்களிலும் காணக் கிடைப்ப தாகும். அப்புலவனின் ஈடுபாடு கொண்ட உவமை அல்லது உருவகம் திரும்பத் திரும்பப் பயன்படுத்தப்படுவது இயல்பு. கனகவிராயரின் உவமைகளில் சில புதுத்தன்மையுடையன வாகும்.

## முதற்பாடலுவமை

'பூவினில் மருவும் பொற்பார் மணியினில் ஒளியும் போல் என் நாவினில் அறிஞர் நெஞ்சிலுறைந்திடு நாதன்'' என இறைவனைப் போற்றித் தொடங்கும் பாடலில் கத்தனை உவமைவழி வாழ்த்துகிறார்.

மேகந்திரண்டு மழை பொழிவதனைக் கூற வந்த கவிஞர் 'மேகத்திரட்சியானது, சூல் கொண்ட யானைகள் திரள்வது போல, சூல் முதிர்ந்து போகத் திரண்ட வனிதையர் போல் புலம்பித் தடித்துக் குமுறி இடித்துத் திரண்ட அறபாத்து' என்ற உவமை வழி விளக்குகின்றார் (29), மழைத்துளிகள் வீழ்வதை தோகாந்துருக்கி எனும் வீரன் பொழிந்த கணைமாரியெனச் சொரிந்த என்கிறார் (30).

நாட்டு வளம் பாடும் புலவருக்கு உழத்தியர் பயிர் விளைத் துக் 'களை'யெடுக்கும் நிகழ்ச்சியானது, 'றசூலுல்லா' உலகில் எங்கும் தீன் பயிர் விளைத்துக் கயவர் சாயக் குபிர்களாகிய களைகட்டுவது போல இருந்தது என்கிறார் (37). முதிர்கதி ரானது தலை கவிழ்ந்து நிற்பது கற்புடை மகளிர் தலை கவிழ்ந்து நிற்பது போலக் காட்சியளிக்கிறது என்கிறார் (39). நீலவாய் வாவியெலாம் பகீரதி நிகர்க்கும் (45) என நீர்நிலை களையும், உவமைப்படுத்துகின்றார். உயர்ந்தோர்க்கிடையில் 'குரு'வின் முகம் விளங்குவதுபோல் அறபு நன்னாட்டில் மதீனம் விளங்கியது (47).

ஆற்றிலே ஊடுருவுகின்ற மீனினங்கள் தோகாந்துருக்கியின் கணைகள் எசிதின் படை வீரர் தம் நெஞ்சு ஊடுருவி மீள்வ தொக்கும் என்கிறார் (51). கழங்கு கந்துகம் ஆடும் மக்கள் முனிந்தெறிந்த அணிகளிலுள்ள மணிகளெல்லாம் வானில் விண்மீன் கூட்டங்கள் போல விளங்கினவாம் (63).

அலி மைந்தருக்கு நேர இருக்கும் துன்பம் பற்றி அறிந்த பாத்திமாவின் துன்பத்தைக் கூற வந்த புலவர், 'புண்மேற் கடுங்காரம் போட்டாரெனப் புலம்பினார் என்கிறார் (146).

**சோனைமுகி லேறுகண்ட தோகைபோன் மாதரெல்லாம்**
**மேனி வெயர்வரும்ப வேற்கணாரங்கொழித்தார் (148)**

என மயிலின் மெய்ப்பாட்டை மகளிரின் துடிப்போடு ஒப்புமைப் படுத்துவது புதுமையாக அமைந்துள்ளது.

மன்னவரெல்லாம் 'மின்னலுடன் புயலும் பாரில் விழுந்தது போல் விழுந்து வாடினர்' (256) பாத்திமா இவ்வுலகு நீத்த தறிந்த அலியார், 'வலியிழந்தயரும் வேங்கைமானவும், வலையில் பட்டு நலிவுறும் ஒரு மான் போலும், நெஞ்சொடுங்கினர்,' (320).

''வேங்கை ஆலி பிடியிழந் தயருஞ் செங்கட் பெருந்திறல் வேழமொத்தே' (326) சகுபிமார்கள், எரியுறும் மெழுகு போல நிறைமலர் வதனம் சாம்பி நிலை தடுமாறி நின்றனர் (333). என்கிறார்.

நவசேருவான் எனும் பகையரசன் கனவு கண்டு அவல முற்ற செய்தியை,

**கல்லா தவர்நட் பினைப்போன்றுங்**
**கையிற் பொருளற் றவர்தமது**
**நல்லா மிளமை போன்று மனம்**
**வருந்தி நினைந்தான் (411)**

என உவமைப்படுத்துகின்றார். நவசேருவானின் படையும் அலியாரின் படையும் மோதியதனை,

**வடகடலுந் தென்கடலும் வந்தொன்றாய்க் கூடியபோல்**
**அடலரசன் பெரும்படையு மலிப்படையுமெதிர்த்தனவால்**
**திடமுடைய பெரும்புலியுஞ் சிந்துரமு மெதிர்ந்தனபோற்**
**றடவலியு நவசேரு வான்றானு மெதிர்ந்தனரே (497)**

என்கிறார். போரில் ரதங்கள் சோரியாற்றில் மிதப்பது மரக் கலங்கள் கடலில் மிதப்பது போலக் காட்சி தருகின்றனவாம் (508).

வீரர்தம் மூளை குருதிக்கடலில் மிதப்பது செக்கர் வானில் உதித்த திங்கள் போலக் காட்சியளிக்கிறது என்கிறார் (509). இவ்வுவமை புதுமையானதாகக் காணப்படுகிறது.

யானையுண்ட விளாங்கனி தோடிருக்க உட்பழம் செறித்து விடும். அது போலானார்கள் அலியாரால் கைப்பற்றப்பட்ட நவசேருவான் மக்கள் என்கிறார் (536, 585).

**வேடன் வலைப்பட்ட மான்போல்; நஞ்சுண்ட கயலை ஒத்தார் (591)**

**வேழ முண்ட விளங்கனி போல (710, 1562, 1802)**

**நஞ்சுண்ட கயல்போல் (817, 1313, 1629)**

**வலையிற்படு மான் போல் (1569)**

**புண்ணினைக் கருவியாற் கிண்டினாற்போல (2163, 2285)**

**அனலிட்ட மெழுகென உருகி (875, 1009, 2786)**

முதலான உவமைகள் திரும்பத் திரும்பப் பயன்படுத்தப் பட்டுள்ளன.

உசைனாரின் அழகை விளக்கவந்த புலவர் ஒரு புதிய உவமையைக் கையாளுகின்றார்.

**அந்தரமதியே மேரு வகத்தினி லுறுதல் போலச்**
**சுந்தர முகமுந் தோளுந் துலங்கிடக் கண்ட மாதர் (747)**

மற்றொரு புதியஉவமையையும் கவிராயர் உமறுவின் கோபத்தை விளக்கப் பயன்படுத்துகிறார். கைசறிலுள்ளோர் ஈமான் (இறையன்பு) மறந்தனர் எனக் கேட்டபோது, 'அச் சொல் லெரிதான் உள்ளத்தைச் சுட்டு, இரண்டு விழியின் வழி வந்தது போல' விழி அழல் சொரியச் சினங் கொண்டார் என்கிறார் (768).

மேற்கடலில் பானுவிழ மென்கமலப் பூமெலிதல் போற் கருணையார் மாய்ந்து சொர்க்கமதிற் போனவுடன் மதின நாட்டார் கவலை எய்தியது, என உமறுகத்தாப் மறைந்தபோது மக்கள் பெற்ற துன்பத்தை விளக்குகிறார் (827) உமறுகத்தாப் மறைந்தபோது குடிகளின் நிலையை இரு பாடல்களில் உவமை யாகவே விரிக்கின்றார் கவிராயர்.

**தருவிலாப் பொழிலே போன்றுந் தயவிலா ரறமே போன்று**
**மருவிலா மலரேபோன்று மழையிலா நிலமே போன்று**
**முருவிலா வுடலேபோன்று மொளியிலா மதியே போன்று**
**மருவிலாக் கணமே போன்று மரசிலாக் குடிகளானார் (829)**

**ஆயிலாக் காலி போலு மறிவிலாப் புலமை போலுந்**
**தாயிலாக் குழவி போலுந் தமிழிலாத் தமிழே போலும்**
**வேயிலாத் திகிரி போலும் விதுவிலா விரவேபோலு**
**மேயவோரரசு மில்லா திடர்படுங் குடிகளானார் (830)**

**கண்ணிலார் வழிபோந்தென்ன, மனஞ்சென்ற பாதை சென்றார் (831)**

என்கிறார்.

ஒரு கயவனைப் பற்றிச் சொல்லும் போது, ''பள்ளியின் குருவி போலிருந்த பாவி'' (937) என்கிறார். இதன் பொருட் சிறப்பு ஓர்ந்து மகிழத்தக்கதாகும்.

**பருப்பதம் நடத்தல் போலப் பகடொடு மிரதஞ் செல்ல (1046)**

என ஒரு காட்சியை உவமைப்படுத்தக் காண்கிறோம். அலியாரின் படை எதிரிப்படையொடு பொருதியதனை,

**நன்றினைத் தீமைவந்தெதிர்த்தவன் மானவே (1110)**

என நுண் பொருளுக்கு நுண் பொருளையே உவமைப்படுத்துவது சிறப்பாக அமைந்துள்ளது. காலாட்கள் மோதிய காட்சியை,

**அரிகளின் கூட்டத்தோடு மரிக்குழு வெதிர்ந்தா லென்ன (1252)**

என்கிறார் கவிராயர். அலியாரைச் சூழ்ச்சியில் கொல்ல வந்த விருத்தையை 'ஆலமோர் விருத்தை ரூபமாகி வந்ததனை யன்னாள்' (1381) என உவமைப்படுத்துகிறார்.

எசீதுக்குப் பலரும் உபதேசம் செய்தனர். ஆனால் அது ''உப்புநீர்க் கடற்கரை காய மொத்தது'' (1455). எசீது விரும்பிய பெண் உசைனாரை மணந்தாள். 'முயற்சி எலாம், ஆற்றிற் கரைபுளி யேய்த்த தென்று' கூறி மறுகினான் (1531)

அசனார் மடிந்தபோது அவர்தம் மக்கள், 'சிறு புலியனையர், பூனை முசலென வொடுங்கி வீழ்ந்தனர்' என்று அவர் தம் துன்பம் காட்டுகிறார் (1632) அலியாரின் மகனுசைனார் தம் நகர்விட்டுப் பிரிந்து துணைவரோடு சென்றதனை,

**கன்றும் பிடியுங்களிறுந்தம் பகைகண் டுறைநல்லிடம்விட்டுச்
சென்றதன்மையே போல (1715)**

என விளக்குகிறார்.

இறைவனை எண்ணி உசைனார் கலங்கி இருந்தபோது எசீதின் படைகள் அவரை வளைத்துக் கொண்டன. இதனைச் சூரிய கிரணத்தோடு ஒப்பிட்டிருப்பது புதுமையானதாக இருக்கிறது.

**இரும்புகழினரைச் சூழ்ந்தா ரிரவியை யூர்கோள் வட்டம்**
**பொருந்திட வளைந்த தென்ன (1928)**

என விளக்குகிறார். உசைனார் எசீதின் படையினரால் வளைக்கப்பட்டுத் தாக்கப்பட்டார். இதனைப் புலவர் அடுக்குவமையால் விளக்குவதைக் காண்கிறோம்.

**வலையினிற் படுமான்போலும் கரைபடு மச்சம் போலும்**
**நிலைகெடக்குழியில் வீழ்ந்த நிறக்கரி போலும் தீயின்**
**உலையின்வாய் உறுப்படக்கிப் போலவும் மாவின் வாயின்**
**தலையுறு தவளைபோலும் பூஞைவாய் எலியே போலும்**
**(2053)**

**ஐயிடை ஈக்கள் போலும் அழறிடை வேழம்போலும்**
**வெய்யதூண் டிலெனு முள்ளை விழுங்கிய மீன்கள் போலும்**
**மையறு மனத்தீ யோர்பா லங்கடன் பட்டார் போலும்**
**நெய்யழல் மீதிற் போலும் நெஞ்சுநொந் துருகினார்கள்**
**(2054)**

இவ்வுவமைப் பாடல்களை இராமனுடைய பாணங்களால் திகைப்படைந்த இராவணனின் நிலையைக் காட்டும் பழம் பாடலொன்றுடன் ஒப்புமை காண்கிறார் **சிலம்பொலி செல்லப்பன்** (அணிந்துரை).

**விடங்கொண்ட மீனைப்போலும் வெந்தழல் மெழுகைப்போலும்**
**படங்கொண்ட பாந்தள் வாயிற்பற்றிய தேரை போலும்**
**திடங்கொண்ட இராம பாணம் செருக்களத்துற்ற போது**
**கடன்கொண்டார் நெஞ்சம் போலக் கலங்கினான் இலங்கை**
**வேந்தன்**

மாலையில் கதிர்படுகின்ற நேரம். சந்திரனும், மேல் நிற்கிறது. இதனை உவமைப்படுத்தும் கவிராயர்.

**நீர்விளை யாடு கின்ற யிருவருள் ளொருவ னங்நீர்க்**
**கார்தனிற் குதித்த தேபோல் கதிர்குட கடலுட்புக்கான்**
**(2065)**

என்று அழகாக உவமைப்படுத்துவது இயற்கை அழகுடையதாகும்.

புகழ் மின்னும் உசைனுக்கு உற்றது போல் நமக்கும் துன்பமுறுமெனக் கருதிய வெய்யவன் மேற்கடலில் மறைந்தான் என்று அழகுறப் பாடுகின்றார் கவிராயர்.

**அகமார் துயரடைந்து தன்னகம்புக் கார்குதவ**
**மிகவே அடைத்ததென வெய்யவன்மேற் கடன் மறைந்தான்**
**(2103)**

போர்க்களத்தில் தெறித்த அம்புகள் 'பொருந்திரை வேலை தன்னிற் பிறங்குமீன் விழுதல் போலும்', என உவமைப்படுத்தப் படுகின்றன (2418). சறாயீலின் படை வென்று உமறு. முதலானோர் வருதலை உவமைப்படுத்தும்போது,

**வாடிய பயிர்க்கு வான மழைபொழிந் ததனைப் போலும்**
**நீடிய பசியினோர்க்கு நிறையமுதளித்தற் போலும் (2450)**

என்கிறார். தோகாந் துறுக்கி எசீதின் படைக்கும்பலில் வீழ்ந்து பலரை வெட்டியதனை, ''விறற் சிங்க ஏறு சிந்துரக்குழுமேற் பாய்ந்தென் வெசீதின் சேனை மேற்பாய்ந்து (2489) வெட்டினான் என உவமைப்படுத்துகிறார். துறுக்கியை அப்படையினர் வளைத்தது, புலியை ஆடுகள் வளைத்தது போல என்கிறார் (2496).

பரிதி எழுந்தது கிழக்கில். அதனை 'எசீது தன் படையோர் முகங்கரிந்திடவே துறுக்கிவந் தெழுதல் போல்', (2501) என உவமைப்படுத்துகிறார். நலமிலா எசீதுக்காகப் பொருதிய வீரர் உடல்மீது துறுக்கிவிட்ட அம்புகள் அடுக்கடுக்காகப் பதிந்து கொண்டன. அதனால் அவர்கள் 'சலலங்கள் (முள்ளம் பன்றி) ஒத்தார், வச்சிரப்படையை யொத்தார்', (2509) என்கிறார்.

அப்துல்லா சையாது எனும் எசீதின் படைத்தலைவர் சகுபிகளிடம் அகப்பட்டார். அதனை,

**தாயிலாக்குழவிபோற் றண்மை யார்முகி**
**லேயநன் மழையிலா விளம்பைங் கூழ்கள்போ**
**லாயனே யின்றிமே யாடு போலக்கோன்**
**வாயிலாக் குடிகள்போன் மண்ணி னானநாம் (2577)**

என வருந்துவதாக உவமைப்படுத்தியுள்ளார். பிடிபட்ட எசீதின் படை வீரர்களிடம் சகுபிகள், ''வம்பன் எசீதை புளிய மரத்தினது கொம்பென்று உன்னிப்பிடித்தீர்; சிக்குருக் கொம்பென்று எண்ணாது' எனக் கூறினர் (2586). துன்மன அப்துல்லா சையாதை நீங்கள் வேண்டும் வண்ணம் வதையுங்கள் என்று வீரர்களிடம் அரசர் கூறியபோது அவ்வீரர்கள், 'சுவைகெழு சர்க்கரை யதனாற் போட்ட பந்தரிற் தேன்மழை பொழிந்தது

ஒத்தது நாம் வேட்ட வண்ணம் வேந்துரைத்தது', என்றார்கள் (2595).

எசீதின் சிறையிருந்த உசைனார் குடும்பத்தினர் விடுதலையாகினர். இதனை,

**மகிழ்ந்தனர் யாருங் காரார் மாசினின் மறைந்திருந்த**
**திகழ்ந்திடு மினன்க ளோடு திங்கள்கள் வெளிப்பட் டாங்கு**
**(2657)**

என உவமைப்படுத்துகிறார் கவிராயர். எசீது ஓடி ஒளிந்தான். அலியார் மகன் கனீபா விரட்டினார். இக் காட்சியைக் கூற வந்த கவிராயர்,

**புண்டரீகந்தனைக் கண்டு விரைவி னோடும் புல்வாய்ப்போல்**
**வண்டடன் பயத்தி னோடின் மன்னுஞ் செயத்தார் துரத்திப்**
**பிடியார்கொல் (2636)**

எனும் உவமையைக் கூறுகிறார். தாமரையைத் தேடி ஓடும் வண்டுக்குத் தீயன் எசீதை ஒப்புமைப்படுத்துகிறார். தமிழ்க் **காப்பிய மரபில்** நற்பண்பினர்களையே இவ்வாறு உவமைப் படுத்துவது மரபாயிருக்கச் சிறிய மாற்றம் செய்துள்ளார் கவிராயர். பிற உவமைத் தொடர்களின் பாடலெண்கள் அடிக் குறிப்பில் தரப்பட்டுள்ளன.[1]

## பழமொழித் தொடர்கள் உவமையாதல்

புலவர்கள் தம் உலகியல் சார்புக்கேற்பப் பல **பழமொழி** களைத் தம் காவியங்களில் பயன்படுத்துகின்றனர். புலவர் தம் புலமைத் திறத்தை எடுத்தியம்புவனவாகவும் இவை அமைகின்றன. **கம்பராமாயணத்தில்** அனுமன் சீதையிடம் இராமனின் துன்ப நிலையை விளக்கும்போது, 'மத்துறு தயிரென வந்து சென்று இடைதத்துறும் உயிரொடு புலன்கள் தள்ளுறும் (5413) எனப் பழமொழி சார்ந்த உவமையைக் கையாளுகிறான். அதேபோல அனுமன் சீதைக்கு உறுதி கூறியவிடத்து. 'புகன்ற யாவும் கைந்நிலை நெல்லியங் கனியின் காட்டுவேன் (5414) என்பதமைகிறது. **சிந்தாமணியில்,** 'யானை உண்ட விளாம்பழம், (232, 1024) எனும் பழமொழி உவமையாகின்றது. கனகாபி

---

1 உவமைத் தொடர்கள்: 64, 126, 184, 261, 333, 350, 372, 467 478, 482, 507, 786, 1096, 1160, 1919, 2357, 2475, 2483, 2506. 2512, 2517, 2575, 2590, 2605, 2623.

ஷேகமாலையில் பாத்திமாவின் கவுறு தோண்டுவோமென நின்ற சகுபிகளின் நிலை ''கல்லினாருரிப் போமென்று கழறல் போல்'', (349) என உவமையாகிறது. உமறினைக் கொன்றவர் யாரென அறியாது மயங்கினர் சகாபிகள், 'உள்ளுடைந்தனர் யானை உண் விளங்கனி மான' (790). மறுவான் சூழ்ச்சி செய்து கடிதம் எழுதும் முறையைக் கவிராயர்,

> **கூவிழிக் காக முக்காற் குளிப்பினுங் கொக்காங்கொல்லோ**
> **தாவுறு மிழிஞ னென்ன தான்மிக வுயர்த்தி னாலுங்**
> **கோவுழி யுறைய மச்சர் குணம்பெறு வானோ தீய**
> **பாவியுள் ளகத்து வேறு நினைந்தனன்... (949)**

எனும் பழமொழிகளால் விளக்குகின்றார்.

அன்னை ஆயீசா முன்னர் ஆலியர் அழுதததனை, 'கனல் தனித் திடுவா னெண்ணிக் கனலைமூள் வித்தாரொத்தார்' (1212) எனும் பழமொழியால் விளக்குகின்றார். உணவளித்துப் போற்றிய அலியாரைக் கொன்ற பையனை, 'சோறு தரும வர்க்கே யிரண்டகஞ்செய்ப் படுபாவி', என்ற பழமொழியால் காட்டுகின்றார் (1389). அப்துல்லா என்பாரின் மனைவி மீது காதல்கொண்டு அடைய எண்ணிய எசீதின் முயற்சியை' 'எலி பிடித்திடுதற் கோங்கு மந்தர மகழ்ந்தாற்போல வாகும், (1449) என்றும் 'தேனுக்கினைந்தவோர் முடவனேறி யெடுப் பலியா னென்றாங்கு', என்றும் (1450) பழமொழி வாயிலாக விளக்குகிறார் கவிராயர்.

அரசு கிட்டாதிருந்த மாவியாவிடம் அவர் மகனது நோய் பற்றிக் கூறுவது 'வெந்த புண்ணில் கோல்கொடு தாக்கிக் கிண்டலை' எனும் பழமொழி வழி விளக்கப்படுகிறது (1462). எசீது மணக்க முனைந்த பெண் உசைனாரை மணந்தாள். 'கிணறு வெட்ட வொன்றுதல் பூதமாங்கே யுணர்த்தில மானோ' எனும் பழமொழி இதனை விளக்குகிறது (1524). 'இடிமேல் இடிவிழுந்தென', இடைஞ்சல்கள் வந்து சேர்ந்தன உசைனா ருக்கு (1711).

'புடவையின்றி முழம் போடல்', 'பண்டம் மாவின்றிச் செய்தென்', 'முடவன் கொம்பினிலார் தேனுக்கு வந்திடல்', எனும் பழமொழிகளும் பயன்படுத்தப்பட்டுள்ளன (2199). 'தானொன்று நினைக்கப் போய் ஒன்றினைத் தெய்வம் நினைத்தலுஞ்சீர் வானிந்த வுலகந் தன்னிற் சகசமென் பதனைமான' எனச் சறாயீல் கூறினார் (2241).

எசீதின் சுடுசொல் புண்ணின் மேன்னெருகிழியாவே சுட்டது போன்று, 'திண்ணெகிறேனன வெண்ணிச்சிக் குருக்கொம்பைப் பிடித்தாரொத்தார்' (2285). எசீதின் படைஞர் எண்ணினர் நாட்டையார் ஆண்டாலென்ன என்று, அதனை,

**நாட்டினுக் குரிய நல்ல துரைவந்து நண்ணினாலுந்**
**தோட்டிகள் தமக்குப் பில்லின் சுமை சுமக்குதல்தான்போமோ**
**(2430)**

எனும் பழமொழிவழி விளக்குகிறார். உசைனாரின் அரை ஞாணைக் கவரச்சென்ற ஏவல்பையன் அறைபட்டுக் கண்ணி ழந்ததனை,

**பிள்ளையின் வரங்கேட்பான் போய்ப் பெற்றகாந்தனை யிழந்த**
**வள்ளையஞ் செவியார் போல்**

எனும் பழமொழி வழி விளக்குகிறார் கவிராயர்.

இவ்வாறு பழமொழிகளை இலக்கியங்களில் பயன்படுத்து வது ஒரு **காப்பிய மரபாகவே தமிழில்** பின்பற்றப்பட்டு வரு கிறது.

## புரவலர் பெருமை கூறும் உவமைகள்

புலவர்கள் தங்களுக்குப் பொருளீந்து புரந்த வள்ளல்களைத் தம் காப்பியங்களில் போற்றுவது ஒரு மரபு. கவிச்சக்கரவர்த்தி தனது புரவலரான **சடையப்ப வள்ளலைத்** தம் காப்பியப் பாடல்களில் போற்றுவதைக் காணலாம்.

கனகாபிஷேக மாலையில் கனகவிராயர் தமது புரவலரான மதுரை வள்ளலான **கனக கொந்தாலகான்** என்பவரைச் சுமார் இருபத்தியொரு பாடல்களில் போற்றிப் புகழ்ந்துள்ளார். இதற்குக் களமாக உவமையினை எடுத்துக் கொள்கின்றார்.

நாட்டுப் படலத்தில் அறபு நாட்டில் செல்வம் மிகுந்து நிறைந்த செய்தியைக் கூறும்போது ''கூடற் சைது கொந்தால கான்றன் செங்கையிற் பரிசு பெற்றோர் செல்வம் போலாயிற் றன்றே'' (44) என்று பாடுகிறார். மதீன நகரின் மதிள் 'கனக கொந்தால கானார் நிலவு கீர்த்தியை நேரவான் சென்றது' (54) என்கிறார்.

**அந்த மான வபூபக்கர் சீர்புகழ்ச்**
**சுந்த ரன்மது ரைத்துரை செய்யிது**
**கொந்தா லகான் கொடுக்குங் கொடையைப் போற்**
**பந்த மாநக ரெங்கும் பரவிற்றே** **(295)**

''தென் மதுரை வரும் செய்து கனககொந்தாலகான் செல்வம் போல'', உமறுகத்தாபு அரசு செய்தார் (366). அவர் புகழ் ''சைது கொந்தாலம் புகழ்போலெங்கும் விளங்கியதே'' (409) கொந்தால கானைச் சென்று சேராருடல் போல் இளைத்தது பெண்டிரின் இடை என்பதை,

**மகிழ்ந்து கவிஞர் தமக்குதவுஞ்**
**சீரார் செய்து கொந்தாலகான்**
**சீமான் றன்னைப் புகழ்ந்திவன்பாற்**
**சேராருடல்போ லுண்டிலை கொ**
**லென்னச் சிறுத்த திவர் மருங்குல் (578)**

என்கிறார். உசைனார் சகருவானை மணந்தபோது அவர்களை மனதில் எண்ணியோர் மகிழ்ந்தனர், ''கொந்தாலகானென் மன்னவனிடத்திலீகை வாங்கினோர் மகிழ்ச்சி போல'' (624) உசைனாரின் திருமணத்திற்காக நகரை அலங்கரித்ததனை;

**மதுவிரி தோன்றி மாலை வணிகரின் மானங் காத்த**
**சதுமறை நெறிதேர் கூடற் சைதுகொந் தால கான்றன்**
**முதிர்பெருஞ் செல்வமென்னச் செல்வத்தின் முதிர்ந்தோ ரிந்த**
**மதினத்தி னுள்ளோ ரென்றி யாவரு மதிக்கச் செய்தார்**
**(731)**

என்கிறார். நாசுநூசு நங்கையும் முகம்மதும் போகம் துய்த்தது 'சீரார் செய்து கொந்தாலகான் நேசுகொள் வார்போல்' (763) அமைந்தது. உதுமானார் அரசேற்றுத்தான மருளினர்; இதனை 'பாரெல்லாம் ஏத்து கொந்தாலகானீகை போலவே (874) எனப் போற்றுகிறார். 'மதுரை மூதூர் கொந்தாலகானார் பெருமைச்சீர் பெற்றதேபோல்' மதீனம் செல்வம் சிறந்தது (1029) என்கிறார்.

சைதுகான் சேய் கனக கொந்தாலகானின் மலரடி வணங்கிலாரை வணங்கியவாள் உறைபுக்காங்கு, கதிரவன் மறைந்தான் (1124). கொந்தாலகானை நாவலர் பாடிக் கொண்டாடியது போல் அலியார் புகழ் பாடினர் (1238).

'ஆசீங்குலத்தார் செழிப்படைந்தது கொந்தாலகானின் பொருளால் மதுரை செழித்தது போல (1413, 1647).

கொந்தாலகானிடம் பொருள் பெற்றோரின் 'மிடி' ஓடுவதேபோல் உசைனாருக்கு அஞ்சி ஓடினர் பகைவர்'' (1990).

**அலிப்புதல்வரைப் பார்த்திருந்தார், கொந்தாலகானின்**
**செங்கைத் தென்மலரினைத் திண்பாரோர் பாத்திருந்தது**
**போல (2449)**

இவ்வாறெல்லாம் புரவலர் பற்றிய உவமைகளை இக் காப்பியத்தில் இடமறிந்து இணைத்துள்ள கவிராயரின் கவிப் புலமை எண்ணி மகிழத்தக்கதாகும்.

## உருவகம்

புலவர் தாம் கருதிய பொருளைச் சிறப்பாக விளக்க உவமை யன்ன உருவகங்களைப் பயன்படுத்துகின்றனர். கனகவிராயர் சில வர்ணனைகளிலும் இவ்வுருவகத்தனைப் பயன்படுத்து கிறார்.

சகருவானின் அழகை வர்ணிக்கும் கவிராயர்,

**கலைகண் டெழுதும் புத்தகமோ**
**கமிடப் புறமோ புறவடிகள்**
**தொலைவி லெழிலு மொளிவுமுறுந்**
**துகிரோ விவர்கண் மணிவிரல்கள்**
**அலைகொள் வாவி யனநடையா**
**ரழகு மிகுந்த மயிற்சாயல்**
**நிலையி னிறுத்தும் பிரதமைபோ**
**லுமறி னவைமுன் னிவர் நின்றார் (580)**

என்றடுக்குகின்றார்.

அலியவர்களைக் குறிப்பிடும்போதெல்லாம் புலிஅலி, அலிப்புலி என்றே குறிப்பிடுகின்றார்.

**தீன்பயிர் (28)**
**மழையில்லாப் பயிர் நாம் (1575)**
**துன்பமாங்கடல் குளித்தனர் (1056)**

இது போன்ற தொடர்களின் வழிக் காப்பிய நடை சிறப்புப் பெறுகின்றது.

## வருணனை

கற்பிதமான காப்பியக் கதைகளில் புலவனின் சுதந்திரம் மிகுதி. தனக்குத் தோன்றிய விதங்களில் பாத்திரங்களையும் இயற்கையையும் வருணிக்கின்றனர். வரலாற்றடிப்படையிலான **சமயக் காப்பியங்களில்** வருணனை செய்யும்போது சில கட்டுப் பாடுகள் ஏற்பட்டு விடுகின்றன. **சீறாப் புராணம்** பெண் வருண னையைக் **கேசாதிபாதமாக** வருணிக்கிறது. கதீஜாப்

பிராட்டியை வருணிக்கும்போது விரிவாகப் பாட இயலாமை யால் 'தசைக்கட்டியைப் பெண்ணுருவாக்கிய படல'த்தில் விரிவாக வருணிக்கின்றார். இச்சிக்கல் கனகவிராயருக்கும் ஏற்பட்டிருக்கிறது. அதனாலேயே நவசேருவான் எனும் புறச் சமயத்தைச் சார்ந்த அரசனின் மக்களான சகருவான், நாசுநூசு ஆகியோரை விரிவாக வருணிக்கின்றார்.

முருக்கு மிவர்க ளடர்ந்து திரண்
டிருக்குஞ் சுணங்கு படர்முலைகள் (576)

நெருங்கு முபயவரை தாங்கி
நிற்கு மொருச லாகைகொலோ
கரும்பொன் னாக மேகொன்முலைக்
கயங்கள் பிணித்த சங்கிலி கொன் (577)

ஓராலிலையா லிவர்வயிறு
நீரின் சுழியோ விவருந்தி
வாரார் களப முலைதாங்கி
மகிழ்ந்து...... (578)

வல்லு நிகர்த்த வனமுலைக்கு
மணிக்கச் சணிந்து திருப்புரிந்தார் (661)

படை வருணனையும்,

எழுகட லேகமா யெழுந்த வென்னவே
குழுவுடன் குபிரர்தங் கொற்ற வெம்படை
கழுகொடு கழுகிணங் களித்துப் பின்வர
வழுவறு புரிசையின் புறத்து வந்தனர் (430)

எனச் சிறப்புற அமைந்துள்ளதனைக் காணுகிறோம்.

மருந்தெனினும் பகுத்தருந்தி வந்தவர்க்கா
தரம்பெருக்கி வைய மெல்லாம்
பெருந்தலைமை நிலைநிறுத்திப் பீடுபெற
நிற்றலினாற் பகைபெற் றாலும்
பருந்துநிவந் திடுதுகிர்வாய்ப் பசுங்கிளியு
மொருதிருப்பஞ் சரத்தில் வாழும்
பொருந்துகொடு வரிப்புலியும் புல்வாயு
மொருதுறைநீர்ப் புகுந்துண்டாரும் (369)

என உமறின் ஆட்சி விளக்கப்படுகிறது.

**கம்பராமாயணப்** பாடலடியை இவை நினைவூட்டுவனவாக அமைந்துள்ளன (புலிப்போத்தும் புல்வாயும் ஒரு துறையின் நீருண்ண உலகாண்டான் உளன் ஒருவன். பால. குலமுறை. 5).

ஐந்நில வருணனை இவற்றில் தனித்து இலங்குவதாகும். வருண்னைச் சிறப்புகள் இக் காப்பியத்தில் மிகுந்துள்ளன.

## தற்குறிப்பேற்றணி

புலவன் தனது குறிப்பை வேறு பொருள்களின் இயற்கை இயக்கத்தில் ஏற்றிச் கூறுவது தற்குறிப்பேற்றணியாகும். காப்பியச் சுவையை மிகுவிப்பதற்காகக் காப்பியப் புலவன் கையாளும் உத்திநிலையாகவும் இதனைக் கொள்ளலாம். பின் நிகழப்போவதனைமுன்னுணர்த்தும் **நாடகமுரணும்** (Dramatic irony) இத்தன்மையுடையதே. **சிலப்பதிகாரத்தில்** கண்ணகியும் கோவலனும் மதுரையம்பதி செல்லப் புறஞ்சேரி சென்றபோது மதுரைமதிலின் கொடியசைவை' இதற்குப் பயன்படுத்துகிறார் **இளங்கோவடிகள்.**

**வாரல் என்பனபோல் மறித்துக் கைகாட்ட**
(சிலப். புறஞ் 190)

கனகாபிஷேக மாலையில் தற்குறிப்பேற்றணியைப் பயன்படுத்தி ஆசிரியர் தன் கருத்தை விளக்கும் பகுதி இரண்டு இடங்களில் அமைந்துள்ளது.

எசீதின் படையினர் அசனாரின் மகன் 'காசீம்' என்பவரைச் சூழ்ந்து கொண்டு வெட்டினார்கள். இக்காட்சியைக் காணப் பெறாமல் இரவி கடலுள் தாழ்ந்தான். மாலை நேரமும் மறைந்தது' என்கிறார்.

**இரவியிங் கிதனைக் காணற் கினைந்தனன் போல மேல்பாற்**
**றிரைநெடுங் கடலுட் டாழ்ந்தான் மாலையுஞ் செறிந்த வாற்றாற்**
**பொருதுதற் கிந்தக் காலம் பொருந்தின தன்றென் றுன்னிச்**
**செருவிட நீங்கி........... (1839)**

காசீம் ஷகீது (வீரமரணம்) ஆனபோது உசைனார் வருந்தியிருந்தார். இரவு கழிந்து விடிந்தது. அக்காட்சியைத் தற்குறிப்பேற்றணி தோன்றக் கவிராயர் படைக்கின்றார். இன்று என்ன நிகழப் போகிறது என அறிவதற்காக விரைந்து கதிரவன் எழுந்தான் என்கிறார்.

**இற்றையப் பொழுதி லுறுங்காட்சி**
**யாதோ வறிவோ மெனவிரைவிற்**
**கற்றைக் கதிரோன் றனவேழு**
**பரிக டுண்ட வவைகடுத்துப்**

பெற்ற நடையாற் களைத்துதிரம்
பிறங்க வுயிர்த்த வெனச்சிவப்பை
யுற்ற தொருகீழ்த் திசையருணோ
தயமா யிற்றென்று ... ... (1904)

## குறட்கருத்துக்களை எடுத்தாளல்

முந்துநூற் புலமை உடையவர் கனகவிராயர். ஆறு பாடல் களில் **திருக்குறள்** கருத்துக்களை எடுத்தாண்டுள்ளார் கவிராயர். முந்துநூற் கருத்துக்களை எடுத்தாளுவதும் ஒரு காப்பிய உத்தி யாக அமைந்துள்ளது.

உமறுகத்தாபின் ஆட்சியின் கீழுள்ளோர்,

**வருவிருந்து தனைக் காப்பர் செல்விருந்து**
**தனையோம்பி வகுக்கும் (377) மேலாம் திருவுடையர்**

மகதி, என்பவர் கைசறைச் செங்கோல் கோடாது ஆண்ட தன்மையினை,

**படைகுடி கூழ மைச்சு நட்பரண் படைத்தி யாதுங்**
**கடுமொழி யிலராய்க் காட்சிக் கெளியராய்... (541)**

என்று கவிராயர் குறட்கருத்தோடிணைத்து விளக்குகிறார்.

உதுமானாருக்கு முகமது அபூபக்கர் நீதியோ எனக் கேட்டுக் கடிதம் எழுதியதனை,

**தாயென விருந்து காக்குந் தகுதியே மன்னர்க் காகும் (982)**

என்று கவிராயர் பாடுவதும் இதனை வலியுறுத்தும்

எசீது பிறன்மனை நயந்தது தீமை என்பதை உணரான் ஆனான். இதனை,

**பிறன்மனை நயந்த வாற்றாற் பெறும் பயனிதுவே யல்லாற்**
**பிறதுற லிலை நமக்கென் றெண்ணினன் (1525)**

எனப்பாடுகின்றார்.

அப்துல்லா சையாது தோற்றபோது முகமது கனீபாவின் படையினர் எதிரிகளை நோக்கிக் கூறும்போது,

**எண்ணித்துணிக கருமந் துணிந்த பின்ன**
**ரெண்ணுவ மென்ப திழுக்கென் றியற் பெரியோர்**

**கண்ணியுரைத்தமொழி கருதா மற்புரிந்தீ**
**ரண்ணியுறு மாழ மறியாமற் காலிட்டீர்** **(2587)**

எனக் குறிப்பிடுவதாகப் பாடியுள்ளார்.

எசீது பதுங்கியபோது முகமதுகனீபாவிடம் மக்கள் கூறுகின்றனர்,

**குலமக டனக்குத் தெய்வங் கொழுநனே புதல்வருக்கு**
**நலமிகுந் தந்தை தாயே நரர்த்தெய்வந் துறவோர் கட்குப்**
**பலநலக் குருவே தெய்வம் பகரியா வர்க்குந் தெய்வம்**
**(2664)**

இது போன்று குறட்கருத்துக்களை எடுத்தாண்டு காப்பியச் சிறப்பை மிகுவித்திருக்கிறார்.

ஐந்நில வர்ணனையிலும் போர்க்காலத்தில் இசைக்கும் இசைக்கருவிகளைக் கூறும்போதும் (495, 1644) திருமணக்கால இசைக் கருவிகளைக் குறிப்பிடும்போதும் (745, 754) நிமித்தம் பற்றிக் கூறும்போதும் (1209) சுயம்வரம் பற்றிய வருணனையிலும் (646) **தமிழ் மரபினைப்** போற்றுகின்றார் கனகவிராயர்.

பாத்திரங்கள் காணும் கனவுகளைக் காப்பிய உத்தியாகப் பயன்படுத்துவதும் காப்பியமரபாகக் காணப்படுகிறது. கனகவிராயரும் தம் காப்பியத்தில் கனவுகளைக் கதையியக்கத்துக்குப் பயன்படுத்தியுள்ளார். உதுமான் முதலானோர் நபியவர்களைக் கனவில் காணுகின்றனர். இனி நிகழப் போவதை அவர்கள் உணர்த்துகிறார்கள். மது கைநந் நயினார் வேத முகம்மதை மனாமிற் கண்டனர் (987) நவசேருவான், இடிவிழுந்து வயவில் லொடியக் குருதி ஒழுகக் கனவு கண்டான் (410). அலியார் (1384) உசைனார் (1702; 1950) அசனார் (1534) ஆகியோரும் கனவு கண்டனர்.

**அசரீரி** கேட்பதும் ஒருவகை உத்தியாக இக்காப்பியத்தில் பயன்படுத்தப்படுகிறது. உமறுகத்தாபை அடக்க எண்ணிய போது நபியவர்களின் கபுறு திறந்து, அவரது உடலை கபுறுக் கிடமாக வைக்குமாறு 'அசரீரி' எழுந்தது (823). இதே போல உசைனார் மதீனம் விட்டுச் செல்லுமாறு அசரீரி எழுந்தது, எனக் கவிராயர் பாடியிருக்கிறார்.

# முடிவுரை

கனகாபிஷேக மாலை பெருங்காப்பிய இலக்கணங்கள் அனைத்தும் பெற்ற முதல் தமிழ் இசுலாமியக் காப்பியம். இசுலாமியச் சமய மரபும், தமிழ்க் காப்பிய மரபும் பாதிக்கப் படாத நிலையில் காப்பியத்தை யாத்துள்ளார்.

ஒரு காலக்கட்ட வரலாற்றை உள்ளடக்கிய இக்காப்பியத் தில் சில கற்பித அமைப்புக்களும் காப்பியப் போக்குக்காகப் பின்பற்றப்பட்டுள்ளன.

இசுலாமியக் காப்பியங்களில் காண இயலாத **'சுயம்வர நிகழ்ச்சி'** இக்காப்பியத்தில் பாடப்பட்டுள்ளது.

தமிழ் இலக்கிய மரபு சார்ந்து ஐந்நில வர்ணனை பாடி அறபு 'நாட்டுக் களத்தை' தமிழ்க்களம் போலப் படைப்பதால் கற்பவருக்கு அன்னியத்தன்மை தோன்றாமல் தடுக்கப்படுகிறது.

பெண்பாற் பாத்திரங்கள் தனித்துயர்ந்து நிற்குமாறு பாடப் படவில்லை. எட்டு அரசர்களின் வரலாறு கூறும் நூலிது. தனித்துயர்ந்த தலைவனாக யாரையும் குறிப்பிட இயலாது. உசைனார் வரையான தலைவர்கள் சம இடம் பெறுவது போலத் தோற்றமளித்தாலும் அலியாரின் வரலாறே நீண்ட அமைப்புப் பெறுகிறது. இறைவனே தன்னிகரில்லாத் தலைவன் என்றும் கவிராயரின் மனக்கருத்து வலிமையுறுகிறது. இதனால் இசுலாமியச் சமய மரபு இதில் காக்கப்பட்டுள்ளது.

ஷீயாபிரிவில் சிறிது நாட்டம் கொண்டவராயினும் அவர் களது முழுக்கருத்துக்களையும் இவர் ஏற்றுக் கொண்டதாகத் தெரியவில்லை. பழமொழிகளையே உவமையாகப் பலயிடங் களில் பயன்படுத்தியுள்ளார். பதிகப்படலத்தை முன் வைக்காது நான்காவது படலமாக அமைத்துப் புதுமை செய்துள்ளார். கிளைக்கதைகள் இக்காப்பியத்தில் இடம் பெறவில்லை. காப்பியக் கூறுகள் அனைத்தையும் பெற்ற இன்றமிழ்க் காப்பிய மாக இது திகழ்கிறது.

# துணை நூற்பட்டியல்


கனகாபிஷேக மாலை, செய்யிது முஹம்மது ஹஸன், ஐந்தாம் உலக இஸ்லாமியத் தமிழ் இலக்கிய மாநாடு, கீழக்கரை, 1990.

காப்பிய புனைதிறன், சுப்பிரமணியன். ச. வே., தமிழ்ப் பதிப்பகம், சென்னை, 1979.

சீறாபுராணத் திறனாய்வு, அப்துல் கறீம், ஆயிஷா பதிப்பகம், அதிராம பட்டினம், 1980.

தமிழ்க் காப்பியங்களில் அவல வீரர்கள், ஞானமூர்த்தி, தா.ஏ., மீனாட்சி புத்தக நிலையம், மதுரை, 1973.

திறனாய்வுக் கொள்கைகள், நடராசன். தி. சு., அன்னம், சிவகங்கை, 1990.

முஸ்லீம்களும் தமிழகமும், கமால், இஸ்லாமிய ஆய்வுப் பண்பாட்டு மையம், சென்னை, 1990

Critical Study of Civaka Cinthamani, Kalaikathir, Gnana Murthy. T. E., Coimbatore, 1966.

Epic Structure, David. S., St. Joseph Press, Trivandrum, 1980.

Muslim Contribution to Tamil Literature, Uwise. M.M., Fifth International Islamic Tamil Literature Conference, Kilakarai, 1990.

On the Art of Poetry, Aristotle, Ingram by Water (Tr) 1954.

# சிறப்புச் சொல்லகராதி

(எண்—பக்க எண்)



# உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம்

சி. ஐ. டி. வளாகம், தரமணி, சென்னை-600113.
தொலைபேசி: 2350992

## ஏவி. எம். ஜபாருதீன் நூர்ஜகான் அறக்கட்டளை வெளியீடுகள்

ஹாஜி ஏவி. எம். ஜபாருதீன் அவர்களால் 1983 இல் நிறுவப்பட்டது. இசுலாமிய இலக்கிய ஆய்வினைச் சொற்பொழிவுப் பொருளாய்க் கொண்டது.

### இனிக்கும் இராஜநாயகம்

நீதியரசர் மு. மு. இஸ்மாயீல், டிசம்பர் 1984;
XII + 640; ரூ. 50

வண்ணக் களஞ்சியப் புலவர் படைத்த இராஜநாயகம் எனும் இசுலாமியக் காப்பியத்தை விரிவாக ஆய்வு செய்யும் நூல்.

### குத்பு நாயகம் ஆய்வுரை

டாக்டர் மு. அப்துல் கறீம்; மார்ச் 1987; VIII + 116
ரூ. 15.

வண்ணக் களஞ்சியப் புலவரின் மற்றொரு படைப்பான, 'குத்பு நாயகம்' காப்பியத்தின் சிறப்பைப் பாராட்டுகிறது இவ்வாய்வு நூல்.